# வளர் பிறை

கவிதைத் தொகுதி

ஆக்கியோன் :

அல்வாயூர்: மு. செல்லையா

ஆசிரியர்,
தேவரையாளிச் சைவ வித்தியாசாலை.

○

வெளியிட்டது :

காந்தி நிலையம்,
அல்வாய்.

○

அச்சிட்டது :

ஆனந்தா அச்சகம்,
யாழ்ப்பாணம்.

முதற்பதிப்பு : நந்தன, ஆவணி [1952]. பதிப்புரிமை.

# பொருளடக்கம்

# முகவுரை

இந்நூலிலுள்ள கவிதைகளுட் பல, அவ்வப்போது "ஈழகேசரி" முதலிய பத்திரிகை வாயிலாக வெளிவந்தன. சில, 20 ஆண்டுகட்கு முற்பட்டவை.

தமிழன்னை விரும்பும் பாடல்கள் சிலவேனும் இதன்கண் இடம் பெற்றிருக்கின்றன என்பது எனது நம்பிக்கை. இந் நம்பிக்கைதான் இதனை வெளியிடவுங் காரணமாயிற்று.

எனவே, தமிழ் அன்பர்கள், ஆசிரியர்கள், மாணவர்கள் இதனை ஆதரித்து ஊக்குமவண்ணம் அன்புடன் வேண்டுகின்றேன்.

வாழ்த்துரையும், அணிந்துரையும் வழங்கிய தமிழ்ப் பேரறிஞர்களுக்கு எனது மனமார்ந்த நன்றி உரியது.

இங்ஙனம்
**மு. செல்லையா**
ஆசிரியன்,

"காந்தி நிலையம்"
அல்வாய், P. O.
20 8–52.

# அணிந்துரை.

தமிழ்த் தென்றல்
திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள்

●

யாழ்ப்பாணம் — அல்வாய் — அறிஞர் செல்லையா அவர்கள் இயற்றிய பாக்களிற் சில என் முன்னிலையில் வாசிக்கப்பட்டன. பாக்களில் தமிழ் மணங் கமழ்கின்றது. சொல்லிலும் பொருளிலும் அல்லல் இல்லை; மல்லல் கொழிக்கிறது. ஆசிரியர் முயற்சி புது உலக ஆக்கத்துக்கு ஊக்கம் ஊட்டும் என்று நம்புகிறேன். அவர்தம் முயற்சி வேல்க.

சென்னை,
4 - 1 - 52.

திரு. வி. க.

# வாழ்த்து.

சென்னை ஆஸ்தானகவிஞர்
நாமக்கல்: வெ. இராமலிங்கம்பிள்ளை அவர்கள்

●

யாழ்ப்பாணத்து அல்வாயூர் ஆசிரியர் திரு. மு. செல்லையா அவர்கள் நெடுநாட்களாகவே கவிதை இயற்றி வருபவர் என்பதை அறிவேன். அவர் இயற்றியுள்ள "வளர் பிறை" என்ற கவிதைத் தொகுதியைப் படித்துப்பார்த்து மிக்க மகிழ்ச்சியடைந்தேன். அதில் பல நல்ல கற்பனைகள் உள்ளன. தெய்வ பக்தியும் தேச பக்தியும் நிறைந்து காந்தீயத்தைப் புகட்டுகின்ற இந்த நூல் மிகவும் மெச்சத்தக்கது.

ஸ்ரீ செல்லையாவின் கவித்திறம் நாளுக்கு நாள் வளர்ந்தோங்கி அவருக்குப் பெரும் புகழுண்டாகவேண்டுமென்று மனமார வாழ்த்தி இறைவனை வணங்குகிறேன்.

நாமக்கல்,
15-8-52.

**வெ. இராமலிங்கன்**

# அணிந்துரை.

இலங்கையின் தபால், தந்தி, செய்தி மந்திரியும், யாழ்ப்பாணம் : பரமேஸ்வராக் கல்லூரி அதிபருமான திரு. சு. நடேசபிள்ளை *B. A. B. L.* அவர்கள்

●

பண்டிதர் மு. செல்லையா இயற்றியுள்ள வளர் பிறை என்ற செய்யுட்கோவை அவர்களது இயற்கைக் கவித்துவத்தை நன்கு புலப்படுத்துகிறது. செய்யுள்கள் சுவையும் நயமும் உடையன; தெளிவான நடையில் அமைந்துள்ளன. இவை தமிழ் மக்களின் பாராட்டுக்கு உரியவை ஆகும்.

சுன்னுகம், 
16 8-52.

சு. நடேசபிள்ளை

# பிழை திருத்தம்

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 4 | 1 | 1 | தமிழ் | தமிழர் |
| 6 | 4 | 2 | சேர்ந்த | சேர்த்த |
| 7 | 1 | 3 | விரைவான் | விழைவான் |
| 8 | 4 | 1 | குணம் | குண்டு |
| 9 | 2 | 2 | மானில | மாநில |
| 9 | 3 | 1 | வெள்ளை | வெண்ணெய் |
| 10 | 2 | 2 | மெங்கும் | மொக்கும் |
| 13 | 1 | 3 | புறந்தே | பறந்தே |
| 38 | 1 | 5 | இந்தநாள் | இந்நாள் |
| 42 | 1 | 2 | திருநெறி | நெறி |
| 42 | 1 | 4 | ஆறு | அறு |
| 48 | 1 | 2 | தொலைத்திடத் | தொலைந்திடத் |
| 49 | 4 | 2 | மைந்திம் | மைந்தும் |
| 49 | 4 | 4 | சூழ்ந்த | சூழத்த |
| 51 | 3 | 3 | தருமப்பு | தருமம்பு |
| 60 | 5 | 3 | மெய்வுறு | மெய்யுறு |
| 61 | 1 | 1 | துயருறு | துயரறு |
| 63 | 5 | 1 | புரிந்திடும் | புரந்திடும |
| 64 | 3 | 4 | துன்னு | துன்று |



பொன்னூரு மல்வைப் புரிசன்மன் போற்றுகலைத்
தன்னேரில் சைவத் தமிழோசன்—முன்னோர்நூல்
ஆயும் மதிநுட்பன் அன்பன்செல் லையாநன்
நேய மொடு வாழ்க நெடிது.

— பண்டிதர் க. மயில்வாகனம், கரவை.

உ

# வளர் பிறை

## (கவிதைத் தொகுதி)



## கலைவாணி துதி.

விருத்தம்.

அள்ளிடு கிணற்றிற் பெய்தே அழுக்கிலும் மாரிபெய்யும்
தெள்ளிய நிலவு தீயோர் சிறுமனைக் கண்ணுஞ் சேரும்
வள்ளுவன் முதலோர் வாயில் வாழ்கலை வாணி அன்னே
எள்ளிய புன்மை யேன்நா விருந்தருள் இறைஞ்சினேனே.

# தமிழ்த்தாய் வணக்கம்

[ எண்சீர் விருத்தம் ]

அகத்தியன்தொல் காப்பியனை முன்னு ளீற்றாய்!
அருட்கீரன் கபிலன்சீர் ஔவை ஈன்றாய்!
மிகத்தெளிந்த வள்ளுவனை உலகுக் கீந்தாய்!
மேவுகம்பன் இளங்கோவை விதந்து பெற்றாய்!
சகத்திலுயர் சம்பந்தர் முதலோ ராழ்வார்
சந்தான குரவர்சீர்த் தாயு மானுர்
பகுத்துணர்ந்த பாரதியைத் தந்த கன்னிப்
பழந்தமிழ்த்தாய்! புதுமலர்த்தாள் பணிந்திட்டேனே

[ அறுசீர் விருத்தம் ]

மின்னுஞ்சீர் நாவ லோனை
மேவுதா மோத ரத்தைப்
பன்னும்பன் மொழிதேர் ஞானப்
பிரகாசப் படிமை யோனை
உன்னருஞ் சாமி நாதன்
உயர்விபு லானந் தாவை
மன்னும்வே தாச லத்தை
வழங்குதாய் வணங்கி னேனே.

# எங்கள் நாடு

("சிங்களத் தீவினுக்கோர் பாலமமைப்போம்" என்ற மெட்டு)

எங்கள் நாடு—வளந்தங்கும் நாடு—தமிழ்
ஈழமென்று சொல்லிடுமி லங்கைநாடு (எங்கள்)

சிங்களர்கள் செந்தமிழ் சோனகர்பிறர் —பலர்
தேருமைக்கி யத்திறமை சேர்ந்தநாடு
கங்கைநிகர் யாறுகுளங் கொண்டநாடு —பண்டு
கமத்தொழில் மேலோங்கி நின்றநாடு. 1.

பண்டுவிளை வித்தநெல்லில் மிகுந்தவற்றை—அயல்
பாரதநாட் டுக்கீந்த பண்புநாடு
மண்டு பசிக்கொடுமை யாலே இன்று —பிறர்
மாவுக்குக் கையேந்தி வாழும்நாடு. 2.

செல்வமுயர் தென்னை றப்பர் தேயிலைபனை—திகழ்
தேமா கதலிமுதல் தெய்வதருக்கள்
பல்வகைப் பயனுதவி அன்னியரையும் —இங்கு
பரவும் வர்த்தகஞ்செய்யப் பற்றுநாடு. 3.

சிற்பத் திறன்விளங்கும் பொல்லநறுவை —புகழ்
சிகிரியாச் சித்திரங்கள் கொண்டநாடு
அற்புதப் பவுத்ததர்ம அரண்விளங்கும்—பண்டை
அநுரத புரப்பெருமை அண்டுநாடு. 4.

மின்னுமணி காரீயமுப்பு முத்துண்டு —வனம்
மேவுகரித் தந்தம்புல் லெண்ணெயுமுண்டு
நன்னீர் வெந்நீரூற்றுப் பலவுமுண்டு—தொன்மை
நாகரிகப் புதைபொருள் நகர்களுண்டு. 5.

அன்னியர்கள் நம்மையடி மைப்படுத்தவே—அரண்
அமைத்திடுங் கோட்டை அகழ் கொண்டநாடு
கன்னியர்கள் கற்புநெறி பூண்டநாடு —அந்தக்
கண்ணகிக்குக் கோயில்கட்டிக் காத்தநாடு. 6.

அன்னைமரி யம்மை அமர் மடுப்பதியும்—கதிரை
ஆறுமுக அப்பனுறை திருத்தலமும்
மின்னுவெள் ளரசுபொலி அநுரதமும்—கொண்டு
வீடுபெறும் ஆத்மீகம் வேண்டுநாடு. 7.

நான்குமத பக்தர்களும் யாத்திரைசெய்து—பொதுமை
நாட்டுச்சிவ னொளிபாத நாகமோடு
வான்குடுமி முட்டுபிற மலைவளத்தால் — பச்சை
மரகதத் தீவான மாண்புநாடு. 8.

சங்க மிருந்துதமி ழாய்ந்தநாடு — புத்த
தர்மசாஸ் திரங்கள்பல தந்த நாடு
திங்கள்முடி சூடுசிவன் ஏசுநாதர்—அந்தச்
சீரியஅல் லாபாதஞ் சேரும்நாடு. 9.

மேவுகல்லோ யாகுண்ட சாலைமின்னேரி—கடம்
விரியும் பரந்தன்கிளி நொச்சிமுதலாம்
தீவுக் கினியதிட்டம் வளர்வதனால்—புதுமைத்
தேசிய நல்வாழ்வு சேரும்நாடு. 10.

# காந்தி மகானும் திருக்குறளும்

முன்னிரண்டு அடிகளிற் காந்திமகானின் வரலாற்றுக் குறிப்பும் பின் இரண்டு அடிகளில் அதற்கேற்ற திருக்குறளும் அமைந்துள்ளன.

[ வெண்பா ]

ஒண்மை தருமஹிம்சை உண்மையிரண் டுள்ளிருத்தித்
திண்மைதரு மெய்வாழ்வு செய்காந்தி—அண்ணல்வழி
"ஒன்ருக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று" [குறள் 323]

கஸ்தூரி பாய்மனேயும் காந்திமகா னுங்கலந்தே
உத்தமவாழ் வுற்றமர வாழ்வுற்ருர்—இத்தரையில்
"வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்" (50)

சிற்றுடையர் தாங்குமதச் சின்னமணி யார்வேடம்
பெற்றிலார் காந்திதவம் பேணிநின்ருர்—உற்ற
"மனத்துக்கண் மாசில ஞதல் லனைத்தறன்
ஆகுல நீர பிற" (34)

தென்னுபி ரிக்காவில் தேரும் வழக்கினிற்பொய்
துன்னுவதற் கஞ்சித் தொழில்துறந்தே — மின்னுமகான்
"நன்றே தரினும் நடுவிகந்தா மாக்கத்தை
அன்றே யொழிய விடல்" (113)

தண்டியிலே உப்பெடுத்துச் சட்டம் மறுத்தெதிர்த்துக்
கொண்டசத்தி யாக்கிரகக் குன்ருனர்—கண்டதென்ன
"உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து" (596)

பல்லுடைத் தோனைப் பகைவோ னெனக்கருதி
வெல்வழக்கால் தண்டிக்க வேண்டாதார்—நல்ல
"அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்" (203)

போராற் சுயராஜ்யம் பூணும் வழியொழித்துச்
சீராஞ்சாத் வீகமுறை தேர்ந்தமகான் — பேராத
"நன்ருகு மார்க்கம் பெரிதெனினுஞ் சான்ருேர்க்குக்
கொன்ருகு மாக்கங் கடை" (328)

ஆழும் ஹரிஜனங்கட் கன்னே எனவுருகிப்
பாழுந்தீண் டாமை பறித்தமகான் -- நாளும்
"பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யால்" (972)

பட்டம் பதவிசெல்வப் பற்ருெழித்தே இந்தியர்தம்
திட்டத்தில் தொண்டுசெய்யச் சேர்ந்தமகான்—இட்ட
"விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்" (648)

நவக்காளி ஊரின்கண் நண்ணு கொலைக்காலந்
தவக்காலி னுல்நடந்த சாந்தர் — அவக்காலும்
"மன்னுயி ரோம்பி அருளாள்வார்க் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை" (244)

வேகும் கொலைகொள்ளை வெங்கருமஞ் செய்தோர்க்கும்
பாகீஸ்தா னியப் பரிவுகொண்டார் — நோகவரும்
"இன்ன செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்" (314)

நேருவெனும் மாணிக்கம் நீதியொடும் பாரதத்தைச்
சீருயரப் பேணுமெனத் தேர்ந்தமகான்—ஓரும்
"இதனை இதனு லிவன்முடிக்கு மென்ருய்ந்(து)
அதனை அவன்கண் விடல்" (517)

பெற்ற சுதந்திரத்திற் பேரார் பதவிகளைச்
சற்றும் விரும்பாது தன்கடன்செய்—வெற்றிமகான்
"இன்பம் விழையான் வினைவிரைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றுந் தூண்" (615)

ஓங்கும்மெய்க் காந்திமகான் உற்றமர ணங்கேட்டன்(று)
ஏங்கித் துடித்தா ரிகத்தோர்கள்—பாங்கிதுதான்
"உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன்" (294)

துஞ்சாது காப்போம் துணிந்துவெளி யேறுகவென்(று)
அஞ்சா துரைத்தாரவ் வாவணியில் — எஞ்சாது
"சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் லின்மை அறிந்து" (645)

ஜின்னு வெறுத்தாலும் சேர்ச்சிலிகழ்ந் திட்டாலும்
மன்னும் பொறுமையுடன் வாழ்ந்தமகான்—என்னை
"அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தன்னை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை" (151)

ஆங்கிலருக் கஞ்சார் அடிமைநிலைக் கஞ்சிடுவார்
ஓங்குபணி செய்துசிறை உற்றமகான்—வீங்குலகில்
"அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவ(து)
அஞ்ச லறிவார் தொழில்" (428)

உண்ணு விரதத் துறுநோய் பொறுத்தார்தீ(து)
எண்ணுர் பிறவுயிருக் கென்ஞான்றும்—அண்ணல்மகான்
"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு" (261)

தன்னைப் புகழார் தனிப்புகழ் பெற்றூர்தீது
துன்னுஞ் செயல்தோயார் தூயமகான்—என்னில்
"வியவற்க எஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை" (404)

# காந்தியும் சாந்தியும்

[வெண்பா]

மோனத்தால் தன்பொருட்டு முத்திநிலை தேடுதலும்
ஞானத்தால் வீட்டுநெறி நாடுதலும்—ஈனத்தாய்
நாட்டுமக்கள் துன்பமற நன்குபணி செய்காந்தி
ஈட்டுதவம் போலுமோ எண்

உடைசுருக்கி ஊண்சுருக்கி ஒவ்வாத தீய
நடைசுருக்கி நாவைச் சுருக்கிப்—படைசுருக்கிச்
சேவை பெருக்கித் தியாகம் பெருக்கிஉயர்
தேவனென வாழ்ந்தார் சிறை

நாற்பதெனுங் கோடிமக்கள் நாடுஞ் சுயவாழ்வின்
தோற்றமுரு வாய்வந்த தூயமகான்—ஆற்றல்மிகும்
எந்திரப்போர் தோல்வியுற ஏற்ற அகிம்சையெனும்
தந்திரப்போர் வல்லார் சகம்.

நேருரையால் போரொழிப்பார் நெஞ்சினுற் குணம் [செய்வார்
பாரிதனில் போரகற்றும் பான்மையரோ—சீருயரும்
வாக்கும் நினைப்பும் வருசெயலு மொன்றான
பாக்கியத்தோன் காந்திவழி பார்.

ஐக்கியதே சச்சபையும் அன்னபிற சாதன்மும்
ஐக்கியத்தை ஆக்குமோ ஆராய்வீர்—பக்குவத்தோன்
காந்தி செயலும் மொழியும் கடைப்பிடித்தால்
சாந்தி அடையுஞ் சகம்.

["ஈழமணி" 1949]

# நேசக்கட்சியாரும் காந்தியடிகளும்

[சென்ற இரண்டாவது மகாயுத்தம் முடிந்தவுடன் நேசக் கட்சியைச்சார்ந்த அமெரிக்கா, பிரிட்டன், ருஷியா முதலிய வல்லரசுகள் தமது பிற்காலத் திட்டங்களை வகுத்துக்கொள்ளும்பொருட்டுப் பல நகர்களில் மகா நாடுகள் நடத்தி ஒற்றுமையான முடிவுகாணுது தயங்கியபோது இக்கவிகள் பாடப்பட்டன.]

[ ஈழகேசரி 16-12-45 ]

கும்மி

*நேசக்கட் சியென்று கூறிக்கொண்டே எங்கும்*
*நின்று சமர்செய்து வென்றுசுய*
*ஆசை வளர்ந்திடும் உள்ளப்ப கையுடன்*
*அங்குமிங் குஞ்சபை கூடுகின்றார்*

*மட்பகை போன்றிடு முட்பகை பெற்றவர்*
*மானில மாள்பவர் நேசமுற்றால்*
*திட்ப முடனது நீடிக்கு மோவென்று*
*சிந்தித்துப் பாரடி ஞானப்பெண்ணே.*

*வெந்தழற் கட்டிக்கு வெள்ளைச் சட்டையிட்டு*
*மேற்புறம் மூடி விளங்கவைத்தால்*
*எந்த விதம்நிலை பெற்றுத் துலங்கிடும்*
*இந்த நிலைமையை எண்ணும்பெண்ணே.*

உள்ளத்து ரோசங் குமுறிட ஆயுத
சக்தி ஒழிந்திடும் வேளையிலே
கள்ளச் சரண்புகுந் திட்டஅந் நாட்டினர்
கைப்பொழிந் தாறுதல் காண்பாரோ.

"கொன்றுகு மார்க்கம் கடை"யென்று வள்ளுவன்
கூறிய வாசக மெங்கு மெங்கும்
நன்றுகு மிம்மொழி தேர்ந்திடு மிந்திய
ஞானச்செவ் வன்காந்தி நாயகனே.

மக்களைக் கொன்றுபின் மக்களை ஆண்டிடும்
மாய நெறியினை வேரறுத்து
தக்க அஹிம்சையைப் பூமி முழுவதும்
தாபிக்கும் அண்ணலெங் காந்தியடி.

சிந்தையிற் காந்திதன் செய்கையிற் காந்தி
தேகத்திற் காந்தி திகழ்வதனால்
எந்த உலகிற்குங் காந்தி அவர்நெறி
ஏந்தி அடைகுக சாந்தியதே.

பல்லரும் பாத குழந்தையின் உள்ளமும்
பாவையர் போலுயர் பக்தியும் பூண்(டு)
அல்ல லிலுங்கலங் காம லஹிம்சையென்
றாயுதங் கொண்டவன் காந்தியன்றோ.



# வளர் பிறை

[வானத்திலே பூரண சந்திரனை ஒருதினம் கண்டு மகிழ்ந்த பிள்ளை ஒன்று சில தினங்களின்பின், வளர் பிறையையும் அதனைச் சூழ்ந்து ஆயிரக்கணக்கான நக்ஷத்திரங்கள் விளங்குவதையுங் கண்ட உடனே அப் பிள்ளைக்குச் சில சந்தேகங்கள் உண்டாயின. அச் சந்தேகங்களை நீக்கும்பொருட்டுத் தன் தாயை வினுவு கின்ற கற்பனையில் இப்பாடல்கள் ஆக்கப்பெற்றுள்ளன.]

அம்மா, வெளியே வாஅம்மா!
அழகாய் மேலே பாரம்மா!
சும்மா இருந்த சந்திரனைத்
துண்டாய் வெட்டினதாரம்மா? 1.

வட்டத் தோசை சுட்டதுபோல்
வானி லிருந்த சந்திரனைத்
துட்டச் சிறுவன் யாருடைத்தான்?
சொல்வாய் உண்மை தோன்றிடவே. 2.

மட்டிப் பயலவன் வெட்டிவிட்டு
மற்றப் பாதியை எங்கெறிந்தான்?
கிட்ட மினுக்குங் கட்டியெலாம்
வெட்டிய மிச்சத் துண்டுகளோ! 3



# தாயின் மகிழ்ச்சி

தாங்கும் மடிகிடத்திக் குழந்தையின்
தண்முகம் பார்க்கையிலே
ஓங்கிய செல்வ மெல்லாம் மடியினில்
உற்றது போல்மகிழ்வாள் 1.

எண்ணும் மழலைமொழி செவிகளில்
ஏறி இனிக்கையிலே
பண்ணுங் கசந்துவிடும் சர்க்கரைப்
பாலும் புளித்துவிடும் 2.

மெல்லக் குறுநடையில் அசைவுற்று
மேவிடும் போதினிலே
செல்வம் வருவதென்றே அணைத்திரு
செங்கரம் நீட்டிநிற்பாள் 3.

தீற்று முணவுவகை சிதறித்தன்
தேகம் படுகையிலே
ஏற்றுஞ் சிவன்முடியில் – பத்தரிடும்
இன்மலர் போலினிப்பாள் 4.

ஒக்கலை மீதிருத்திச் சிரசினை
உள்ளங்கை யால்தடவி
அக்களிப் போடுமுகங் கொஞ்சுவது
ஆனந்தத் தெல்லையன்றோ 5.

வாரி மயிர்வகுத்தே நகையொடு
வண்ண உடைஉடுத்திப்
பூரித்து முத்தமிடும் போதிலே
போய்விடுந் துன்பமெல்லாம் 6.

கையினிற் புத்தகப்பை எடுத்துயர்
கல்விக்குச் செல்கையிலே
ஐயிரு மாதத்துயர் புறந்தே
ஆனந்தம் பொங்கிடுவாள் 7.

நற்குண மைந்தனென்றே பிறர்சொல்லும்
நல்லுரை கேட்கையிலே
பெற்றிடு நாளினிலும் - உயர்ந்த
பேருவ கையடைவாள் 8.

மங்கையைக் கைப்பிடிக்கும் திருமண
வைபவம் பார்க்கையிலே
தங்கிய வானுலக ஆனந்தம்
சார்ந்ததென் றேமகிழ்வாள் 9.



# சந்திர வினுவிடை

(கும்மி)

வினு:—

கள்வர்க்குத் தீயவன் காமுகர்க் குப்பகை
கஞ்ச மலர்க்குக் கடும்வயிரி
உள்ளத்தி லச்சமில் லாம லுதித்திட
உற்ற துணிவென் னுரைத்திடுவாய்

விடை:—

செல்வம் புகழின்பம் தீய மிடிஇகழ்
சேருந்துன் பமிவை தேசத்திலே
பல்வகை யாகவும் மாறி மாறிவரும்
பான்மையை யாரும் படிப்பதற்கே

வினு:—

உன்னிட முள்ள இருட்டை ஒழித்திட
ஓர்வித மாயும் முயலாமல்
மன்னு முலகத் திருளை அழித்திட
மாதந் தொறும்நீ வருவானேன்.

விடை:—

தன்துயர் விட்டுப் பிறர்துயர் நீக்குதல்
சான்றவர் தங்கட னென்பதனை
என்று முலகிற் கெடுத்துரைத் தேயுண்மை
ஈதென எங்கும் பரப்புதற்கே.

வினு:—

மன்னுங் கிரகணம் பீடித் திடையிடை
மங்கிய தோற்றத்தில் வாழ்வதுமேன்?

விடை:—

தன்னுந் தயரின்றி எப்போது மின்புறல்
தொல்லுல கத்தில்லை என்பதற்கே.

வினா:—

மேற்கி லுதித்துக் கிழக்கினிற் பூரணம்
மேவிய பின்னரும் மேற்கேகி
ஆர்க்கு மினிய ஒளியினைத் தந்தென்றும்
அங்கு மிங்குமலைந் தேவரலேன்?

விடை:—

மேற்கு விஞ்ஞானம் கிழக்கு மெய்ஞ்ஞானம்
மேவு முறையினில் ஒன்றுபட்டால்
பார்க்கு நிரந்தர சாந்தியுண் டென்பதைப்
பார்த்துல கோர்கள் படிப்பதற்கே.

# பூஞ்சோலை

நந்தவ னத்தில்வந்தோம் தோழியே
நன்கு உலாவருவோம்
சிந்தைம கிழ்வுறுவோம் காற்றினில்
தேகசு கம்பெறுவோம் 1.

பற்பல வாம்நிறத்தில் மலர்கள்
பற்றிக் குலுங்குதல்பார்
அற்புதக் காட்சிஇதை இயற்கை
அன்னை அளித்தாளே 2.

மாலைகள் கட்டுதற்குச் சிறந்த
வண்ண மலர்களுண்டு
காலை விரியுஞ்சில சிலபூ
மாலை மலர்ந்திடுமே 3.

வண்டும லர்குடைந்தே தேனினை
வாயிலெ டுத்துண்டிடும்
கண்டு வியந்திடுவோம் மக்கள்நாம்
கற்றில மிக்கலையே 4.

மங்கையர் கூந்தலிலே வண்ணமலர்
சூடி வருகையிலே
தங்க நகையழகும் பின்னிடும்
சந்திரன் நாணிநிற்கும் 5.

ஆறறி வுள்ளவர்நாம் கூடியே
ஐக்கியத் தால்மகிழோம்
ஓரறி வுள்ளமரம் கூடியே
ஓங்குமின் பந்தரல்பார் 6.

பூவைப் பறித்தாலும் பெரிய
பொறுமை தாங்கிஎங்கள்
தேவைக்குப் பின்னும்பல மலர்தரும்
தியாகத்தை நாம்தெளிவோம் 7.

காற்றையும் நீரினையும் நறுமணக்
காவினை யுங்கடவுள்
ஏற்றிடு மேழைகளும் இலவசம்
எய்தப் படைத்தாரே. 8.



# உழுகலப்பையும்
# எழுது பேனவும்

[ஒருநாள் மாலை 4 மணியளவில் ஆறுமுகம் என்பவர் தோட்டத்திலிருந்து கலப்பை, பட்டை, கோடி முதலியவற்றுடன் தம் வீடுநோக்கி வருவாராயினர். அதே நேரத்தில் தமது உத்தியோகக் கந்தோரிலிருந்து வருகின்ற அருணசலம் [கிளாக் Clerk] என்பவர் ஆறுமுகத்தைச் சந்தித்தார். இருவரும் ஏறக்குறையச் சம வயது உடையவர்களாயிருந்தும் அருணசலம் காட்டிக்கொண்ட பராமுகமும் இறுமாப்பும் ஆறுமுகத்திற்கு ஆச்சரியத்தையும் ஆத்திரத்தையும் ஊட்டிவிட்டன. அதனுல் அவ்விருவருக்குமிடையே நடந்த சம்பாஷணை பாடப்பெற்றுள்ளது.]

**"சிங்களத் தீவினுக்கோர் பாலமமைப்போம்" என்ற மெட்டு.**

**கலப்பை'—**

*அஞ்சுமணிக் கேயெழுந்து வேர்வையொழுக—உடல்*
*அங்கம் வருந்தஉண வைவிளைவித்துப்*
*பஞ்சந் தவிர்க்குமெனைக் கடைவிழியாற்—சிறிதும்*
*பாராது போகுமுன் பராமுகமென்னே?*

**பேனு:—**

*பட்டைகொடி தோள்சுமந்து துண்டையுடுத்துச்—சவரம்*
*பண்ணு முகத்துடனே போகுமுந்தனைச்*
*சட்டைதொப்பி சப்பாத்துப் பூண்டுசெல்கின்ற—உயர்*
*சங்கைமிகு மென்கண்கள் காணத்தகுமோ.*

கலப்பை:—

உங்கள் பசிக்கொடுமை நீக்குபவர்யார்—உந்த
ஒய்யார வாழ்வுக்குக் காரணர்கள்யார்
தங்குநிழற் கிழிருந்து நீங்கள்சுகிக்க—வெயில்
தாங்கிஉட லைப்பிழியும் சாதகர்கள்யார்.

பேனா:—

மாதமிரு நூறுரூபா நீயுழைத்தாலும்—நவ
மங்கையர்கள் உன்னைமணஞ் செய்யவிரும்பார்
ஏதுமொரு நூறுரூபா நாங்களுழைத்தால்—எமை
ஏற்றுமணஞ் செய்யத்தவம் இருந்திடுவார்.

கலப்பை:—

நாட்டுப் பெருந்தலைவர் பற்பலபேர்கள்—இன்று
நன்குகமம் செய்யும்படி போதனைசெய்து
ஈட்டுமுண வைப்பெருக்கி நாட்டைக்காக்க—மக்கள்
எல்லாரும் வாருமெனக் கூறவில்லையோ.

பேனா:—

மந்திரிமார் தேசாபி மானிகளென்போர்—கம
மாண்பினை விளக்கியுப தேசஞ்செயினும்
தந்திரஞ்சொல் அவர்மக்கள் இனசனங்கள்—ஒரு
சாண்நிலத்திற் கமஞ்செய்யுஞ் சாதனையுண்டோ.

மின்சார விசிறியின் கீழிருந்து—வாயில்
வெள்ளைச் சுருட்டுகளைப் புகைத்தவண்ணம்
பின்சாரும் “பென்ச” னுடன் வாழுஞ்சுகத்தை—எந்தப்
பேயன் வெறுத்துக்கமம் பேணவருவான்,

**கலப்பை:—**

தேகஉழைப் பவமான மென்னுமுறையில்—கல்வி
தேசத்தி லேபரவி வருகையிலே
நோக வருங்கலப்பை நாடவும்மாட்டார்—மைந்தர்
நுண்ணிய தொழிற்கல்வி நோக்கவும்மாட்டார்.

வீட்டிற் கொருவர்நிசம் கமத்தொழிலைச்—செய்ய
வேண்டுமென்று சட்டமுறை விதித்துவிட்டால்
நாட்டிற் கிருஷிகத்தின் ஏழைமைபோகும்—ஒரு
நாகரிகத் தொழிலென்ற பேருமாகும்.

**பேனு:—**

அன்னமென உன்மனைவி திரிந்தாலும்—பெரும்
அமைதிக் குணங்கள்பல தெரிந்தாலும்
துன்னுங்கர் நாடகப்பெண் தானிவளென்றே—பலர்
சொல்லிப் புறக்கணிப்ப தில்லையென்பையோ.

**கலப்பை:—**

வட்டமுடை மேசைகளைச் சூழஇருந்து—நவ
மங்கையரு மாடவரும் விருந்தெடுத்து
கெட்ட மதுவருந்தி "டான்சு" புரியும்—அந்தக்
கீழான வாழ்க்கைஎமைக் கிட்டுவதில்லை.

பசியாத பேர்களுக்கு உணவளித்து—வெறும்
பகட்டு விருந்துசெயும் பான்மையறியோம்
புசியாத மக்களுக்கு உணவளித்தே—அவர்
புன்சிரிப்பை இன்முகத்திற் பொலியவைப்போம்.

**பேனு:—**

தேசத் தலைவரெனும் பிரமுகர்கள்—இந்தத்
தீமைகளை நன்குணர்ந்து வழிதிறந்தால்
நீச உடைநடைகள் முற்றுமொழிப்போம்—உயர்
நேசமுடன் தேசீய வாழ்வுஅளிப்போம்.

# தமிழ்க்கன்னி தந்த சூடு

(அறுசீர் விருத்தம்)

கன்னியின் வடிவம்.

சங்கநூற் சிரசு தாங்கித்
தகுங்குறள் விழியால் நோக்கி
இங்கித ராம காதை
வாயொடும் இளங்கோ தந்த
மங்கலில் சிலம்பு சிந்தா
மணியெனும் மார்பு காட்டிச்
செங்கைபா ரதியாய்க் கோவைக்
கால்கொடு திரிந்தாள் கன்னி.

காதலன் வேண்டுகோள்.

மைந்தனுன் ஆங்கிலத்தில்
வல்லவன் உத்தி யோகன்
சிந்தையிற் காதலித்தேன்
திருமணஞ் செய்வா யென்றான்
எந்நா டென்றாள் ஈழ
நாடென வீடையி றுத்தான்
பைந்தொடி சிரித்தாள் அண்டப்
பரப்பெலாம் அதிரு மாறே.

கன்னியின் விடை.

மெல்லியல் என்னைப் பேணி
விழைந்திட உன்னா லாமோ
பல்கலைக் கழக வீட்டிற்
பகரிடந் தருகு வாயோ

தொல்லைநம் பண்பா டெல்லாந்
தோய்ந்துநீ வாழ்கின் றாயோ
சொல்லுமுன் உத்தி யோகத்
தொழிலைநான் போற்று வேனோ

அரசியல் எனுமுன் தந்தை
அன்னையர் என்னைப் பேணிப்
பரவிடந் தோறு மேற்ற
பதவியில் இருத்து வாரோ
விரவிய உடையூ ணாதி
மேற்குநாட் டவரை ஒத்தாய்
அரவென உனைவெ றுத்தேன்
அன்பிலேன் அகலென் றாளே.

# குருவியும் குஞ்சுகளும்

## குஞ்சுகளின் துயர்க் குரல்

அன்னையே உன்னைக் காணு அருந்துய ரதனி னேடு
துன்னிய பசியும் வாட்டத் துடிதுடித் தழுகின் றேமே
மின்னலு மிடியுந் தோன்ற மெய்நடுக் குற்றோம் பக்கத்(து)
உன்னுடைச் சுற்ற முண்டோ உதவிநாம் பெறுவ தற்கே

## குருவித்தாயின் வருகை

வந்தனென் மக்காள் நீங்கள் வருத்தமிங் கடைய வேண்டாம்
தந்தனிவ் விரையை உண்பீ ரென்றுரை சாற்றித் தீற்றி
இந்தநாட் பிந்திவந்தே னேனென விடையைக் கேட்பீர்
சிந்தனை கலங்கு மந்தச் செய்தியை நினைக்கும் போதே

## குருவித்தாய் செய்தி கூறல்

நண்ணிய மரப்பொந் தொன்றில் நாவினுக் கேற்ற உண்டி
திண்ணமாய்க் கிடைக்கு மென்று தேர்ந்ததன் பக்கஞ்
[ சென்றேன்
கண்ணியொன் றுங்கு மாட்டிக் கடிதினி லெனைப்பி டிக்க
எண்ணிய ஒருமா பாவி இருந்தனன் மறைவிடத்தே

கண்டது மஞ்சி வேறோர் கனிமரக் கொம்பை நாடி
அண்டிய உங்க ளன்பால் ஆங்கிருந் தழுதே னந்தோ
கொண்டதோர் துவக்சை நீட்டிக் குறிவைக்கும் போதி
[ லாங்கே
மண்டிய மின்னல் தோன்ற மாறிய இலக்கிற் சுட்டான்.

நீங்கள்செய் தவத்தால் தப்பி நீண்டதோர் தூரஞ் சென்று
பாங்குட னுணவு தேடிப் பதைப்புடன் வந்தேன் மக்காள்
தாங்கரு முலக மீதில் தாயன்பு பெரிதே என்பார்
ஏங்கினேன் மாண்டு மீண்ட இயல்புட னிங்குற் றேனே.

## குஞ்சுகள் கூறியவை

உன்னுடை இறைச்சி தின்றால் உறுபசி ஒழிவ தாமோ
முன்னொரு பறவைக் காக முனைந்துயர் கருணை யாலே
தன்னுடல் தசைய ரிந்த சால்புடைச் சிபிவம் சத்தார்
மன்னிய மனித ருள்ளே வாழ்ந்திடலில்லை யாமோ

ஆயிரம் லட்ச மாக அவனியிற் கல்விச் சாலை
ஆயின வென்றும் மாந்தர் ஆறறி வுடையா ரென்றும்
கோயிலு மமைத்துத் தெய்வங் கும்பிடு கின்ற ராமே
வாயிலா எம்மைக் கொல்ல மனம்வரு கின்ற தாமோ

## குருவித்தாய் கூறல்

கொல்லுதல் பாவ மென்பார் குற்றமே அல்ல என்பார்
அல்லல்சேர் நரகம் சொர்க்கம் ஆவன இல்லை என்பார்
பல்வகைக் கொள்கை உள்ளார் பாரினில் வாழ்வ தாலே
எல்லையில் லாத துன்பம் எய்தினர் உலகத் தோரே

சிந்தையை வளர்க்குங் கல்விச் சாலைகள் சிறந்தா லென்ன
நொந்திட எம்மைக் கொல்லல் நூதன மாகு மோதான்
எந்திரத் தாலே லட்சம் மக்களை எளிதிற் கொல்லும்
தந்திரங் கண்டார் கற்றோர் தாரணி இனிப்பா ழாமே,

மற்றொரு பிறவி உண்டேல் மலடியாய் வாழும் வண்ணம்
உற்றிடு வரத்தைப் பெற்றே உலகிடைப் பிறப்பே னின்று
பெற்றிடும் உங்க ளாலே பேதைநான் பட்ட துன்பம்
அற்றிட ஊழி செல்லும் அறிவரோ கருணை யற்றோர்.



# புரட்சிப் பெண்

[தாய்க்கும் மக்களுக்கும் சம்பாஷணை]

கும்மி

தாய்:—

செந்தமி ழாங்கில மாங்கல்வி யூட்டினம்
சீர்பெற வுய்வளர்த் தோமினி நாம்
சிந்தை மகிழ்வுறு சீர்க்கலி யாணமுஞ்
செய்திடல் வேண்டுஞ் செல்வம்மையே

மகள்:—

இல்லற மாகிய நல்லறம் பூண்டிட
இன்பத் தமிழ்மண வாழ்வுபெற
நல்ல வயதும் புகுந்தது தானம்மா
நாயகன் யாரென்று கூறுகவே.

தாய்:—

ஓங்குமுத் யோகமும் பூண்டவன் தானெம்
உறவு முறைசற்றுத் தூரமுள்ளான்
பாங்குட னேஉனைப் பார்ப்பதற் கேயென்று
பத்துத் தினங்கள்முன் வந்தவன் தான்

மகள்:—

காற்சட்டை மேற்சட்டை தொப்பி யணிந்தொரு
காளை யெனவந்த வாலிபனென்
மேற்புற ரூபத்தைக் கண்டுகொண் டாலது
வேண்டிய சோதனை யாய்விடுமோ.

தாய்:—

கண்ணுக் கினித்திடும் மேனி அழகுடன்
கைநிறை சீதன முண்டானுல்
பெண்ணுக்கு மாப்பிள்ளை தானே கிடைத்திடும்
பேதையே வீணுரை பேசாதே.

மகள்:—

பண்ணு முறுப்பன்றிப் பண்பொத்த லொப்பென்று
பண்டுநம் வள்ளுவ னேபகர்ந்தான்
உன்னுமிவ் வொற்றுமை தாங்கிய நன்மணம்
ஓங்குமம் மாசுவை தாங்குமம்மா.

தாய்:—

சீர்பெறு செல்வம் சிறந்திடு சம்பளம்
தேடும் வரன்ஜெய நாதனையே
ஆர்பெறு வாருன்னைப் போலவே செல்லம்மை
அன்புடன் சொல்லுனக் காசையென்றே.

மகள்:—

ஹோட்டல் விருந்துகள் டான்சுகள் கொள்பவன்
கூடிக் குடித்துக் களித்திடுவோன்
கேட்டிருந் தேனவன் தீய குணங்களைக்
கிஞ்சித்து மென்மனத் தாசையில்லை.

தாய்:—

தாங்குமுத் யோகக் கணவ னெனிற்கன்னி
தாய்தந்தை சொல்லுமுன் தாவிநிற்பாள்
ஈங்குநீ என்ன புதுக்கதை பேசினை
என்மனத் தேயிடி வீழ்ந்ததடி.

மகள்:—

என்னசெய் வேன்நல்ல நூல்களைக் கற்றபின்
இவ்வறி வேஎனக் குற்றதம்மா
கன்னியர் பற்பல பேர்வெறும் டாம்பிகக்
கண்ணுடன் வாழ்வைக் கெடுத்துவிட்டார்.

தாய்:—

ஆரை யடிசெல்லம் நீகட்டப் போகிறாய்
அப்ப னறிந்திடிற் கொன்றிடுவான்
சீரை உணர்ந்திந்தக் காலத்து "மோடியைச்"
சிந்தித்துப் பாரடி சீதேவி.

மகள்:—

உங்கள் சகோதர னின்மகன் மாணிக்கம்
உற்ற வயதும் அழகும் உள்ளான்
எங்கள் குடியினுக் கேற்றபண் பாடுகள்
யாவையும் உள்ளவன் எண்ணிடம்மா.

தாய்:—

என்னடி நாராசம் காதினில் ஊற்றினை
எள்ளள வும்மனம் யோசித்திலை
அன்னியன் ஆயினுங் கெட்டவன் ஆயினும்
ஆரடி உத்யோக னைவெறுப்பாள்?

மாட்டுக் குடில்வளைத் தேயெருக் கிண்டிஅம்
மண்ணை அளைந்தங் குழுதுகொத்திச்
சூட்டு வெயில்நின்று வேர்வை சொரிந்திடும்
தோட்டக் காரனுந்தன் சோடாமோ.

மகள்:—

தோட்டத்தில் நின்றுமண் தொட்டுப் பயிர்செய்து
சூட்டினில் வாடிடுந் தொண்டர்கள்தாம்
நாட்டில் முதுகெலும் பென்னும் புரட்சிகள்
நண்ணின வேஉண்மை நன்கறிநீ.

கைலஞ்ச மற்றது டம்பமில் லாதது
கம்பர் புகழ்ந்தது மேற்பதவிப்
பொய்யர் தபவுக்குக் கெஞ்ச விடாதது
புன்மை யிலாக்கமப் போர்த்தொழிலே

தாய்:—

உன்போன்ற மாதர்கள் என்றும் பழித்திட
உற்ற கமஞ்செய்யும் மாப்பிள்ளையை
மின்போன்ற நீமணம் செய்திடில் உன்கல்வி
வீணாகு மென்று விலக்கவனே.

மகள்:—

பைந்தமிழ் ஆங்கில மாம்படிப் புற்றவன்
பாரினி லேகமஞ் செய்திடினும்
நிந்தை யிலாத குணஞ்செய லுள்ளவன்
நித்தம் உழைப்பவன் மாணிக்கமே.

வாழ்வுக் குகந்த வருமான முள்ளவன்
மக்கட்பண் புற்றவன் யாரேனும்
தாழ்வுத் தொழில்கமம் தானென் றொதுக்கிடல்
சற்று மினிப்பொருந் தாதம்மையே.

புத்தகக் கல்வியில் மேம்படு மாதர்கள்
பூமியிற் கற்றவ ராவாரோ
எத்தனை கல்வியும் இல்லறம் பேணிட
ஏற்ற துணையென எண்ணுவரோ.

தாய்:—

கைக்கடி காரமும் மூக்குக்கண் ணாடியும்
காலிற் செருப்பும் குடையுங் கண்டால்
அக்கன்னி நாகரி கஞ்சிறந் தாளென்று
ஆரும் புகழ்தல் அறியாயோ.

மகள்:—

வேண்டிய போதிவை நானு மணிகுவன்
வீணினிற் கொள்ள விரும்பேனே
தூண்டிடு வேஷத்தில் வாழ்வு சிறப்பது
துர்லபம் அம்மா சோராதே.

நம்முடை நாட்டுயர் பெண்மையெண் ணார்நவ
நாகரிகப் புயல் மீதலைவார்
வெம்மன மாதர் மனந்திருந் தாவிடில்
மேன்மை யில்லைக்கம மெய்த்தொழிற்கே.

தோட்டக்கா ரன்மனை யாளென்று பற்பலர்
சொல்லிப் பழிப்பதை நான்மதியேன்
நாட்டினி லிந்தப் புரட்சியைக் கற்றபெண்
நால்வர்செய் தால்துயர் நன்கறுமே.

—o—

# தோட்டிகளின் துயரக்குரல்

[சேவையின் பொருட்டல்லாமல் சம்பளத்தின் பொருட்டு மலமகற்றுந் தொழில் (தோட்டித் தொழில்) இருக்கும்வரையில் உண்மையான மனித நாகரிகம் உண்டானதாகக் கொள்ளுதல் சிந்திக்கப்படவேண்டிய தொன்றாகும்.]

எண்சீர் விருத்தம்

கல்வியெனுங் கண்ணிழந்த படியி னாலே
கடும்பசியாந் தீவருத்துங் கருத்தி னாலே
அல்லல்தரும் மலம்முதலாம் அழுக்கை நீக்கி
அருநரகை நகரமென ஆக்கி வாழ்வோம்
வெல்லுமுயர் மாளிகைவாழ் சுகங்க ளெல்லாம்
மேதினியில் எங்கரத்தில் மேவிற் றன்றோ
பல்விதமாய் நாம்புரியும் நன்றி எண்ணீர்
பகர்கூலிப் பணமுமற்பந் தானே பாரீர்.

அதிகபணந் தந்தாலெம் மைந்தர் கல்வி
ஆய்ந்துகொடு மறியாமை நீங்கி யிந்த
மதியிழந்த கீழ்த்தொழிலைச் செய்ய மாட்டார்
வாழுலகம் நாறுமென மதிக்கின் றீரோ
நிதியுடைய அரசாட்சி நினைவு கொண்டால்
நீண்டபல வழியுண்டு தோட்டி வேண்டாப்
பதிநகர்கள் அமைத்திடலாம் கருணை வேண்டும்
பாவியர்நாம் மனிதரென்ற பரிவும் வேண்டும்.

பெண்ணுடனே சிவபெருமான் உலகத் தோரின்
பீடைதரு மலமகற்றும் பெருந்தொண் டுற்றான்
மண்ணினிலே நாமுமந்தத் தொண்டைத் தானே
மாதருடன் செய்துமல மகற்று கின்றோம்
திண்ணியராய்ச் செயற்கரிய பெரியோர் செய்வர்
செய்தியிதை வள்ளுவனே தெளியச் சொன்னான்
எண்ணிடுவீர் இத்தொழிலை யாரே செய்வீர்
இரக்கமெனுங் கதவுதிறந் தெம்மைப் பாரீர்.

## தோட்டிகள் வேண்டுகோள்

[ நாற்சீர் விருத்தம். ]

கைக்குக் கையுறை காலுக்குப் பாதுகை
மெய்க்குத் தகுச்சட்டை வேண்டிய சம்பளம்
திக்குக் காற்றுகள் சேர்சுக வீடுகள்
தக்கஇ ராக்கல்வி தந்தெமைத் தாங்குவீர்.



# திருக்குறளின் சிறப்பு

வள்ளுவர் தருமொரு நூலுண்டு
வகுத்திடு முப்பா லதிலுண்டு
தெள்ளிய ஈரடிப் பாட்டுண்டு
தெரிந்திடு முயர்நெறிக் காட்டுண்டு 1.

ஒன்பான் இயல்கள் தருநூலாய்
உலகியல் பென்னும் பசுப்பாலாய்த்
தின்பார் எவர்க்குஞ் சுகமூட்டுஞ்
சிறந்த ஆடியிற் பொருள்காட்டும் 2.

ஆயிரத் தொடுமுந் நூற்றுமுப்பான்
அருங்குறட் பாவினை ஆய்ந்துகற்பான்
வாயினில் தமிழ்த்தாய் கூத்தாடும்
மனத்தை மயக்கிருள் நீத்தோடும் 3.

பத்துப் பேர்முன் பொருள்கண்டார்
பலரிந் நாட்புத் துரைகொண்டார்
எத்தனை புலவர்க்கு மிடமளிக்கும்
இளமையும் பழமையு மதிற்கொழிக்கும் 4.

நீதி நெறிக்கோர் நிலைபெறும்
நினைக்க நினைக்கத் தேனூறும்
சாதி வெறிக்கங் கிடமில்லை
சமரச ஞானத் தனிஎல்லை 5.

பற்பல மொழியிலு முருவாகிப்
பரந்தே, சான்றோர் திருவாகி
அற்புதப் பொதுமறை யாமென்றே
அனைவரும் புகழொரு நூலிதொன்றே 6.

தெய்வத் திருக்குறள் கற்றிடுவோம்
சிறந்திடு பண்பா டுற்றிடுவோம்
வையத் தவர்முன் தலைநிமிர்வோம்
வன்மைத் தமிழரென் றேயுயர்வோம் 7.

# பாரதியார்?

["நந்த வனத்திலோராண்டி" என்ற மெட்டு]

செந்தமிழ் நாடென்னும் அன்னை—இந்து
தேச சுதந்திரப் போரினில் முன்னை
வந்து குதித்திடச் செய்த—உயர்
வன்மைக் கவியென்னுந் தேரைச் செலுத்தும்
**சாரதி** பாரதி என்போம்—தமிழ்த்
தாய்க்குப் புதுநகை செய்தணிவித்த
**பொற்கொல்லன்** என்று புகல்வோம்—சாதிப்
புன்மை அழுக்கினைப் போக்கிய **வண்ணான்**
தேசப் பணியெனுஞ் செக்கை—மிகு
தீரத்தி லாட்டிப் பிழிவித்த **செக்கான்**
தீர்க்க தரிசியைப் போல—எங்கள்
தேச விடுதலை வந்திட்ட தென்றே
முன்பறை கொட்டிய **சாம்பான்**—கரடு
முரடு சிறைவெள்ளை மக்க ளடிமை
மோக மரத்தினைச் சீவி—சுதந்திர
தாக மெனும்வண்டி செய்திடும் **தச்சன்**
ஓம்சக்தி ஓம்சக்தி என்றே—வலி
ஊட்டுங் குழலிசைத் தேதமிழ் மக்கட்
பாம்பினை ஆட்டிய **வேடன்**—எளிமைப்
பாவுக்கு வன்மைப் பொருள்தரும் **பித்தன்**
வாழ்க்கைக்குப் பணமற்ற **ஏழை**—உலகில்
வாழஎன் றும்வழி காட்டிய **வள்ளல்**
மாமணி மண்டபத் தின்கண்—எட்டய
மக்களும் மற்றைய மாந்தரும் வாழ்த்த
வாழும் புதுமையைப் பாரீர்—அவன்
மந்திர சக்தியின் மாயத்தைத் தேரீர்
**பாரதி** யாரென்று சொல்வீர்—அவன்
பாதையிற் சென்று பணிசெய்து வெல்வீர்.

— (செந்தமிழ்)

# நேருஜீ வருக!

["கோம்மன் வேல்த்" பிரதம மந்திரிகள் மகா நாட்டின் பொருட்டு ஜவாகர்லால் நேரு இலங்கைக்கு வந்தபோது பாடப்பட்டவை.]

## பன்னிருசீர் விருத்தம்.

ஓங்குந் தியாகத் தீப்புடத்தால் ஒளியுற் றிடுசீர் மணிவருக
ஒடுக்குஞ் சிறையா மாலயத்தில் உள்ளம் மகிழ்தே
[சப்பணியாம்
தீங்கில் தவஞ்செய் ரிஷிவருக தேசத்தலைவர் சிரம்
[வணங்குஞ்
செம்மைத் தலைவா நீ வருக செப்பற்கரிய அறநெறியாய்
வீங்கும் அஹிம்சைக் காந்திமகான் மேவுஞ்
[ஞானப்பாலுண்ட
வித்தக மைந்தா நீவருக விண்ணோர் மருளண்
[ணல்வருக
தேங்கும் வளஞ்சேர் அமரிக்கத் திருநாடுற்ற சீரடிகள்
சிறக்குமிலங்கா மண்படலால் செழிக்கும்படி நீ
[வருகுகவே 1.

விண்தோய் மதியும் சூரியனும் வெட்கிக் கவலும் படியகன்ற
மண்தோய் புகழ்கொள் நவஜோதீ மாரு இளமை
[வளர்குரிசில்
திண்தோள் வலிகொள் அசோகஇறை செலுத்து
[மாஞ்சைத் திறன்வளரப்
பண்தோய் பாரத அரசுசெயும் பயனுர் அமைச்சா
[வருகுகவே 2.

அடிமை இந்தியர் சின்னமென ஆபிரிக்காவி லமைந்த
[ "குல்லா"
முடிமை விளக்குஞ் சின்னமென முழங்கிப் பாரத
[ தேசத்தில்
மிடிமை தவிர்க்கும் பணிபுரிந்து மேலாங் கிரீட மென
[ அணிந்து
மடிமை தவிர்த்திடு மாட்சிசெயும் மன்னு வருக
[ வருகுகவே 3.

( — 'தினகரன்' ஆனி 1949 )



# நேரு வெண்பா

[ ஈழகேசரி — 2-12-45. ]

ஆயுஞ் சுதந்திரத்தா 'லட்டாமிக்' குண்டெனவே
பாயும் பிரசாரம் பற்பலவாந்—தேயமெங்கும்
உள்ள அறிஞ ருவக்கச் செயும்நேரு
தெள்ளியசீர் வாழ்க சிறந்து.

வல்லான் தியாகி வரம்பிகந்த நுண்ணறிஞன்
நல்லா னுலகசன நாயகத்தான்—எல்லாரும்
ஏத்தும் முடிசூடா இந்தியதே சத்துமன்னன்
நேத்திரம்போல் வாழ்க நெடிது.

ஏழ்மரத்தை முன்னுளி ராமனம்பு ஊடுருவச்
சூழ்புவியோ ராச்சரியந் தோய்ந்துநின்றார்—ஆழறிவான்
நேருவிடுஞ் சொல்லம்பு நீள்மரப்பல் லாயிரத்தை
ஊடுருவ லுற்றுணர்வீ ரோர்ந்து.

பாரதமா தாதனது பாழ்கதியைப் பாரெங்கும்
வீரமுழக் கால்விளக்கி மெய்ப்புகழ்செய்—தீரனென்றாள்
'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்'

நாற்பதெனுங் கோடிமக்கள் நாடுஞ் சுதந்திரத்தின்
தோற்றமெனுந் தூண்டா மணிவிளக்கே—ஆற்றல்மிகும்
ஏகாதி பத்தியத்தா ரெச்சிறையி லிட்டாலும்
போகா துனதொளிகொள் போர்.

—o—

# மன்னர் பாமாலை

[ திருவாங்கூர் சமஸ்தான அரசரும் ஹரிசன மக்கள் உள்ளே சென்று வணங்குதற்கு இந்தியாவில் முதல் முதலாக ஆலயங்களைத் திறந்துவிட உரிமை அளித்த கருணையாளரும் ஆகிய **சித்திரைத் திருநாள்** மன்னர்மீது பாடப்பட்ட பாக்கள். ]

[ ஈழகேசரி ஆண்டுமலர்—சித்திரை 1939 ]

பன்னிருசீர் விருத்தம் (வருகைப் பருவம்)

அந்நாள் நாவுக் கரசரின்சொல்
லடைத்த கதவந் திறந்திடினும்
ஆங்குத் தீண்டா தார்புகுந்தே
அன்பின் வணக்கஞ் செயலில்லார்
இந்நாள் யாரும் புகக்கதவை
இனிதே திறக்குஞ் சொற்றந்த
இறைவா வருக ஈசனுடை
எண்ணுந் தளியுட் ஹரிசனங்கள்
முன்னுப் புகுந்து வழிபடலால்
மூவா உலக மக்கணெஞ்சுள்
முனைந்தே புகுந்த முதல்வருக
முரணில் பணிசெய் மணிவருக
பன்னுட் காந்தி எதிர்பார்த்த
படிசெய் திடுமண் ணல்வருக
பகருந் திருவாங் கூர்செய்த
பாக்கியம் வருக வருகவே.

ஓங்கு மிந்து மதமென்னு
மொளிசேர் மணிக்கோர் கறையாக
உற்றுப் படிந்த தீண்டாமை
ஓட்டும் படிக்குப் புடமிட்டு

வீங்கும் புகழ்கொள் குருவருக
மேலாத் தெய்வச் சுடர்வருக
விண்ணோர் மகிழன் ஞல்வருக
மேன்மைக் குன்றம் மேவருக
தாங்கும் பலரைப் புறக்கணித்துத்
தள்ளும் பேதம் சகியாது
தக்கோ னுசாவிற் றளிகளெல்லாஞ்
சாருந் நம்மோர் புகவிடலால்
தீங்கி லிந்து மதஅரணுத்
திகழும் பெரியோய் நீவருக
திருவாங் கூரார் செய்தவமே
சிறந்தோம் வருக வருகவே.

[தக்கோன் சேர் சி. பி. இராமசுவாமி ஐயர்]

## அறுசீர் விருத்தம்

வாட்டுங் கொடிய வெய்யிலினுல் வானூர் முகிலின் [பெய்தலினுல்
கூட்டுந் துயரின் மூழ்காதே கோவில் நமக்குந் [திறந்தமையால்
நாட்டி லுனக்குப் பிற்காலம் நாமே கோவில் நாட்டுதுமே
ஈட்டும் புகழாய் அருளோங்க இனிதே வருக வருகவே.

## பன்னிருசீர் விருத்தம் (அம்புலிப் பருவம்)

என்றுமொரு வெள்ளைமதி யோனெனப்
படுவைநீ இவனெனிற் செம்மைமதியோன்
இரவினிடை யேநீ விளங்கிடுவை
நம்மரச னேயபக லும்விளங்கும்
துன்றிரவு மைநீக்கி நிற்கிருய்
நீயிவன் தொன்மையுறு தீண்டாமையைத்
தொலைத்துநிற் கின்றனன் நீசிவன் சடையிற்
சுருங்குடல முற்று வாழ்தி

நன்றுபுரி இறையிவன் ஹரிசனர்க்
காலயம் நாடித் திறந்ததாலே
நாளுஞ் சிவன்மா லெனுந்தேவர்
நெஞ்சத்துள் நண்ணியுறை கின்றுனினும்
அன்றுமுதல் யாருஞ்செ யாப்பணிசெ
யன்பனுடன் அம்புலீ ஆடவாவே
அழகுதவழ் திருவிதாங் கூராச
னெடுவிரைந் தம்புலீ ஆடவாவே.

### அறுசீர் விருத்தம்

பன்னுஞ் சைவா சாரியர்கள் பகரு மாழ்வா ராதியர்கள்
மன்னுஞ் சமய வாதமிட்டும் மற்றிப் பணிபோ லிந்துமதம்
பின்னும் வளரும் பெருஞ்செயலே பிறங்கச் செய்தார்
[பேசிலிலர்
உன்னுந் திருவாங் கூர்ரசே ஊழிக் காலம் வாழியவே.

## வித்துவான் கணேசையர்

# பொற்கிழி விழாவுக்குக் கண்டனம்

வெண்பா.

மேலறிவி லாதவனை மெய்யகன்ற நெஞ்சானை
மாலறிவு, பூண்டானை மாமகனைச்—சாலவுந்தீக்
காரியங்கள் செய்வானைக் கற்றோ னெனக்கருதிப்
பாரிளனப் பொன்வழங்கீர்—பார்.

[ இதன்கண்: இருபொருள் அமைந்திருத்தலை ஆராய்ந்தறிக. ஈழகேசரி 16-10-38. ]

# இந்த ஒற்றை மாட்டுவண்டி ஓடுவது சாத்தியமா?

விருத்தம்

( ஈழகேசரி 19-6-46. )

எண்ணுங் "காங் கிரசு" "லீக்கு" எனுமிரு சில்லி னூடு
துன்னுமைக் கியமா மச்சைத் துணிவுட னிணைத்து நேர்மை
என்னுமீற் ருணி கோத்தங் கிலங்கிடு தொண்டே என்னும்
பின்னமில் தட்டுச் செய்து பெயராமை ஏர்க்கால் பூட்டி.

வீரரா ஜாசி ஜின்னு விளங்கிடு பட்டே லாதி
தீரர்கள் சூழ்ந்தி ருப்பத் தேர்ந்திடு ஜவஹ ரென்னும்
பேரமர் காளை பூட்டிப் பிறங்கிடு மஹிம்சைக் கோலால்
சீரமர் காந்திப் பாகன் செலுத்திடிற் சேமந் தானே.

# ஆறுமுக நாவலர்

பாட்டிற் கிடந்த தமிழன்னை யாண்டும் பரவுவகை
தீட்டி வசனத்திகழ் திருநெறி காட்டிச் சிவநெறிகள்
நாட்டிற் பரவ வழிஈட்டிச் சைவம் நனிவிளங்க
ஆட்டிய சூத்திர தாரி ஆறுமுக நாவலனே.

மூவர் தர்மம் [வெண்பா.]

சென்னையிலே பச்சையப்பன் சீர்சாலும் யாழ்ப்பாணச்
சுன்னையிலே சேர்ராம நாததுரை—மின்னும்
கரவையிலே சிற்றம் பலமுதலி கண்டார்
பரவுகல்விச் சாலை பல.

---

## இலங்கைச் சிங்கம்

# சேர் பொன். இராமநாதன் அவர்கள்

[தேகவியோகமானபோது பாடியவற்றுட் சில]

கட்டளைக் கலித்துறை.

ஒன்று வுலகத் துயர்ந்த புகழன்றி ஓர்ந்துரைக்கின்
பொன்றுது நிற்பதொன் றில்லெனும் வள்ளுவர் [போதமொழி
குன்று தமைவுற வாழ்ராம நாதனின் கோலமுகம்
என்றுகுங் காண்பதென் றந்தோ இலங்கை இரங்கினளே.

இங்கிலாந்து சென்று மீண்டமை

சுறவின் பெருங்கடல் நீங்கிநம் ஜோர்ச்சிறை யின்பதியை
மறவி மிகும்முது மைப்பரு வத்துறு மாண்பதுதான்
பிறவிப் பெருங்கட னீங்கி இறைவனின் பேரடியை
உறவித் தரையினிற் காட்டா யெமக்கிங் குரைத்ததுவே.

போட்டார்ப் பிணிக்குந் தகையை அவாவிமுன் கேட்டிலரும்
வேட்ப மொழிந்திடு சொல்வன்மை பெற்றளம் [மேதைவள்ளால்
பூட்டா லடையுண் டதுபோ லிலங்கைப் புறம்பலறக்
காட்டா யொருவழி தோன்றுத் துணையினிற் கற்பகமே,

பருத்தித்துறை — புலோலியூர் வழக்கறிஞரும்

தொழிலாளர் துயரகற்றும் உண்மைத் தொண்டரும் ஆகிய

# தோழர் செ. தருமகுலசிங்கம் (ஜெயம்)

அவர்கள்

## [ காலஞ்சென்றபோது பாடியவற்றுட் சில ]

மன்னும் விரோதி மதிஆடி பன்னிரண்டில்
துன்னு மியாழ்ப் பாணத்துச் சோதியென—மின்னுந்
தருமகுல சிங்கமெனுஞ் சால்புடைய தீபம்
இருள்கவியு மாறணைந்த தே. 1.

அஞ்சாத நெஞ்சு மழகார்ந்த புன்னகை யுங்கருணை
எஞ்சாத கண்ணு மிராப்பக லோய்வின் றியங்குடலும்
பஞ்சான மாந்தர்க் குதவு மனமும் பலசபையில்
மஞ்சார் பிரசங்கஞ் செய்நாவு மெவ்விதம் மங்கினவே 2.

ஐந்தொழி லாளி சிவன் முன்பு மார்க்கண்டற்
[ காயுதைத்தான்
மைந்தன் ஜெயத்திற்கிங் காயிர மாந்தொழி லாளிவர்க்கம்
வந்துதைப் பாரென அஞ்சிய ஏமன் வருத்த மெனப்
புந்தியில் யாருந் தெரியுமுன் னின்னுயிர் போக்கினனே 3.

( சிவனை வைதல் )

ஓட்டி லிரந்தவன் பித்தன் சிறுமதி உற்றவனோர்
மாட்டுக் கொடியன் படுநஞ்ச னெச்சிலுண் டோன்மகிழ்ந்து
நாட்டுக்குச் சேவைசெய் தொண்டன் ஜெயத்திற்கு
[ நல்வயது
நீட்டி அமைக்க மறந்தான் பெருந்துயர் நீண்டதுவே 4.

# புதுமணமக்கள் உலாப்போதல்

*மணமகன்:—* போதுசன பாதுகாப்பு அதிகாரி
சேர். ஒலிவர் குணதிலகா

*மணமகள்:—* ஸ்ரீ லங்காதேவி.

[மணஞ்செய்த காலத்தில் புதிய தம்பதிகள் பூம் பொழில் நுகர்தல், புனல் விளையாடல் முதலியவற்றை நிகழ்த்தி மகிழ்ந்து உலாவிவருதல் பழந்தமிழ் மக்கள் வழக்கமாதலின் அவ்வழக்கத்தைப் பின்பற்றி ஸ்ரீலங்கா தேவியும் அவளது பிராணநாயகர் — உயிரை யுத்த அபாயத்தினின்றும் காப்பாற்றும் அதிபர் திரு. ஒலிவர் குணதிலகா அவர்களும் உலாப்போகின்ற கற்பனையில் இக் கவிகள் இயற்றப்பட்ட காலத்திலே யப்பானியர் பர்மா நாட்டைப் பிடித்துக்கொண்டு இந்தியாவில் நுழை யும் சமையத்தில் இருந்தனர்.]

ஈழகேசரி 17-12-44.

## புதிய பூஞ்சோலை

### அறுசீர் விருத்தம்

*உணவினை விளைக்க மாட்டா துயர்ந்திடு குரோட்டன் ரோசா*
*மணமில்செவ் வந்தி யாவும் வாய்ப்பில என்று நீக்கி*
*உணவுறு வெண்டி கீரை உயர்ந்திடும் மிளகாய் போஞ்சி*
*குணமுறு வாழை ஓங்குங் கொல்லையாஞ் சோலை காணுய்*

*ஹிற்லரின் செருக்குப் போல்மேற் கிளர்ந்திடும் வெண்டிக்*
*[காய்கள்*
*மற்றவன் வீழ்ச்சி போன்று மடிந்திடும் மிளகா யீட்டம்*
*உற்றிடும் யப்பா னுள்ளம் போலவே ஊச லாடிப்*
*பற்றிடு கொம்பு தேடிப் படர்வன பாக லாதி.*

## புதிய குளத்தின் நீர் நிறைவு

அஞ்செனு மாண்டு முன்னே அடுத்தயுத் தத்தின் துன்பம்
நஞ்சென வருத்த மாந்தர் நலிந்துதாம் வடித்த கண்ணீர்
எஞ்சலி லாது சேர்ந்தே யீங்கடைந் திட்ட தொப்ப
வஞ்சியே தோன்று மிந்த வளமுடைத் தடாகம் பாராய்

போரினை விரைந்து செய்து புகழ்மிகு வெற்றி பெற்றே
சீரிய கணவன் மாரைச் சீக்கிரந் தருக என்று
வீரியர் மனைவி மார்கள் குறிப்பினல் விளம்பல் போலும்
ஆரியல் முகங்கண் அன்ன தாமரை குவளை ஆராய்

[முகம்: தாமரை. கண்: குவளை.]

## வீதிக்காட்சி:— சங்கக்கடை

பணமுடை யாரே யாவும் பற்றிவீட் டினிலே வைக்கப்
பணமுடை யாரே கஷ்டப் படுவரென் றுளத்திற் கொண்டு
குணமுறு கூப்பன் வைத்தே யாவருஞ் சமமாய்க்
[கொள்ளற் (கு)
உணவுடைப் பொருளை விற்கும் உயர்சங்கக் கடைகள்
[பாராய்

பணமுடையார்: பணம்+உடையார், பணம்+முடையார்

## சீ. டீ. சீ. உணவுச்சாலை

பசைக்கென்று முன்னாள் வந்தும் பராமுகஞ் செய்த
[மாவைப்
பிசைந்துபற் பலவாம் பண்டம் பேணியே செய்து தீம்பால்
இசைந்ததே நீரி னேடு மின்தமிழ் போலு முண்டி
மிசைந்திட வழங்கும் சீடீ சீயின்மெய்க் கடைகள் பாராய்.

## இலவசப் பாற்சாலை

சத்துடை உணவில் லாமற் சார்தரு சிறுவர் தாய்மார்
மெத்தவு மிறக்கின் றார்கள் வெந்துய ரிதுத விர்க்க
உத்தம வழியீ தென்றே உவந்துபாற் சாலை ஆக்கிச்
சித்தியி லுணவ ளிக்குஞ் செயலிது மகிழ்ந்து நோக்காய்.

## யுத்த சேமிப்பு

கொள்ளும் பணத்தைப் போற்றுமற் கொடியதாம் கள்ள
[மார்க்கட்டில்
அள்ளி யிறைத்தே பிற்கால மல்லற் படாத வகைஎண்ணி
உள்ள பணத்தி லொருபகுதி ஓங்குஞ் சேமப் பத்திரத்தில்
மெள்ள விடவே சனக்கூட்டம் மேவிச் செல்லுந்
[தெருநோக்காய்.

## வயற் காட்சி (சிங்களர் தமிழர் ஒற்றுமை)

ஏரும் மாடும் "டாங்கி" யென இயைந்தே உழுத
[விதைநெல்லின்
போரும் உயர உயரப்பே மாவின் போரும் வெற்றிதரும்
நீரும் கலப்பை தாக்கிடுவீர் என்றே "பண்டா"
["நீலகண்டர்"
சேரும் வயலி லொத்துழைக்குஞ் செம்மைத் தன்மை
[சிந்திப்பாய்.

## தோட்டக்காட்சி—பொது

ஏரினை வெறுத்தொ துக்கி இயலுமுத் யோக ரென்னும்
பேரினை விதந்து கூறிப் பெருமிதங் கொண்ட மக்கள்
பாரினில் தலைகு னிந்து பல்லிளித் திரங்கச் செய்த
சீரிய பயிர்கள் தோன்றுந் திருவுடைத் தோட்டம் பாராய்.

## குரக்கன்

அரக்கன் கிற்லர் ஐந்தாண்டாய் ஆக்கும் பஞ்ச [மழிப்பதற்கே
பரக்குந் திரண்ட கதிர்தாங்கிப் பாரிற் சிரசை [நிமிர்த்திநின்று
உரக்கும் வழியை மறவாதீ ருண்மின் எமையே [என்றுரைக்கும்
குரக்கன் குழாத்தின் தியாகத்தைக் கொடியே யாவர் [கூறவலார்.

## தானியங்கள்

வள்ளுவர் குறளில் வந்த வளமுடைத் தினையே சாமை
தள்ளிய கம்பு சோளம் தகையுற வளர்ந்து முன்னாள்
எள்ளினார் மாந்தர் தம்மை எனுங்குறை கருதி டாமல்
புள்ளினங் கவரா வண்ணங் காவலிற் பொலிதல் காணாய்.

## மரவள்ளி

கட்டையன் யப்பான் துஷ்டன் கருதுபர் மாவின் நெல்லை
முட்டுறக் கவர்ந்தா னேனும் முயற்சியோர் இகழ்ச்சி [எய்தார்
விட்டிடு கிழங்கு தந்தோம் வெல்கவென் றூக்கு மாபோல்
நெட்டுறச் செழித்துக் காடு நிகர்மர வள்ளி காணாய்.

# சிவ வணக்கம்

[பின்வரும் இரண்டு பாடல்களிலும் யாழ்ப்பாணக் குடாநாட்டிலுள்ள பல கிராமங்களின் பெயர்கள் அமைந் திருப்பது காணலாம். ஈழகேசரி 29-11-36.]

கட்டளைக் கலித்துறை

மன்னு ரணிந்திடு சுன்னுக மேவுமம் மாதகலான்
ஒன்ருர் தொலைத்திடத் தாவடிக் குற்றவ னாரெழுவான்
பன்னுகத் தோடுய ரல்வாய் மதியும் பரித்திடுவான்
துன்னுலை இக்கென என்வினை வாட்டுவன் தொல்புரனே.

## திருமால் வணக்கம்

பச்சிலைப் பள்ளிகொள் சங்கானை மாதக லம்பரித்த
முச்சகக் காப்பனை முன்ஆனைக் கோட்டை முரித்தவனை
நச்சென வோங்குமல் லாகங்கொள் ராட்சத நாதனுடை
அச்செழுந் தேகிடக் கொன்றருள் மாலை அகங்கொளலே.

## பணிகாரப் பாட்டு (சிவன்)

கட்டளைக் கலித்துறை

அப்பம் விளங்கு முறுக்குண் சடையனை அன்ருெருநாள்
தப்பும் படிசுரர் உந்தோசை கேட்டுத் தயவடையா
முப்பழ முண்டருள வாயால் விடமுண்ட மூன்னவனை
எப்பொழு துங்கும்பிட் டுய்வார் பிறவியி லேகிலரே.

## சிலேடை வெண்பா.

[சேர் பொன். இராமநாதன் அவர்களுக்கும் ஈழகேசரிக்கும்]

தந்தைபெயர் பொன்னெனலால் தாவில்சுன்னை மேவிடலால்
சந்தமுறு மீழத்தார் தாங்குதலால்—நந்துசமா
திப்பே றுடைமையாற் சேர்ராம நாதனெடிங்(கு)
ஒப்பாகும் கேசரியென் ருேர்.

யாழ்ப்பாணம்

## தொண்டைமானாறு—செல்லச்சந்நிதி

# சுப்பிரமணிய சுவாமி

நிந்தாஸ் துதி.

## விநாயக வணக்கம்

வெண்பா.

பெருகுந் திருவருள்போற் பேராநீர்க் கேணி
அருகமரு மானைமுகத் தையன்—மருமலர்ந்தாள்
சிந்தை பணிந்து செல்வச் சந்நிதிவாழ் சேய்மீது
நிந்தாஸ் துதியுரைக்க நேர்.

## நிந்தாஸ் துதி

பொன்னமருந் தொண்டை மானாற்றிற் பொலிந்த செல்வச்
சந்நிதியில் மேவுந்த யாநிதியே—நின்னப்பன்
எப்பொழுதும் நட்டமுற எம்மவர்க்கி லாபம்நீ
தப்பாது செய்குவையோ தான் 1.

நங்கையர்க்கு நான்குவிழி நாதனுக்கீ ராறுவிழி
தங்குமயிற் காயிரங்கண் தானமைந்தும்—எங்குறைகள்
கண்டொழிக்க வன்மையிலாக் கந்தாநின் சந்நிதிசேர்
தொண்டருக்கி யாதோர் சுகம். 2.

வாழும் பதிசெல்வச் சந்நிதியாய் மன்னுமன்பர்
ஆளும் பெயர்செட்டி என்றமைந்திம்—நாளுமுனை
வாழ்த்து மடியார் வறுமையுறக் காரணமென்
சூழ்ந்தமங்கை மார்தடையோ சொல். 3.

[ சூழ்ந்த என்பதன் விகாரம் ]

சட்டியிலே கொக்கவித்துச் சாருக்கி நீதரலால்
பெட்டியிலே அன்னம் பெருகினதென்--திட்டமுடன்
சிந்தைகளித் தார்வறியார் சேர்ந்துபுசித் தாரடியார்
முந்தும் துலாமதியில் முன் 4.

**கந்தசட்டி நாளிலே ஏழைகளுக்கு அன்னதானம் அளிக்கப்படுவது வழக்கம்.**

ஓங்கும் கடைம்கனுய் உன்தந்தைக் கோதுவித்து
வீங்குசிறை நான்முகனை நீவிடுத்த—தீங்கையெண்ணிப்
பெண்தருவா ரின்றியோ பேசுமும்பர் யானையொடு
மண்தருமா னமணந்தாய் மன் 5.

செட்டியெனும் பேருடைநீ செல்வர்களே உன்பாதங்
கிட்டி யுரைப்பவற்றைக் கேட்பதன்றி—எட்டிநின்றே
ஏழை உரைப்பதனை ஏற்காயென் றெண்ணுமல்
நாளைவீ ணுக்கினனே நான் 6.

அஞ்சுதலை நானுடையேன் ஆறுதலை நீயளித்தால்
விஞ்சுதலைப் பாரமெனை மேவாதோ--துஞ்சுதலை
விட்டளிகள் மூசுமலர் மேவுசெல்வச் சந்நிதியில்
இட்டசித்தி ஈஎந்தை யே 7.

பன்னிருகைச் செல்வன்நீ பாழும் பிணிவருத்தும்
என்னெருதைத் துன்பத்தை யெண்ணுயேல்—சந்நிதிவாழ்
கந்தா அபய வரதக் கரமுடைய
மைந்தா எனல்வீண் மதி 8.

அக்கினியி லேயுருவாம் ஆனவுன்றன் மேனியிலே
இக்குநிக ரரன்பால் இறைத்தாலும்—மிக்கஅனல்
ஆறிநெஞ்சு நீகுளிராய் ஆனதினல் என்துயரம்
மாறமனம் கொள்ளாய் மதி 9,

வன்மைமிகு சூர்முதலை வாட்டியநீ கானம்வாழ்
மென்மைமிகு வள்ளிக்குத் தோற்றதுமேன்—உன்னிடத்தில்
நம்பிக்கை கொள்ளவொரு ஞாயமுண்டோ சந்நிதிவாழ
தும்பிக்கை யான்தம்பி சொல். 10.

ஈழகேசரி 16-9-1951.

# பொது நிந்தாஸ்துதி

[ ஈழகேசரி 4-10-36. ]

வெண்பா.

நாய்விரும்பி ஆகேறி நஞ்சுடைய நாகத்தின்
பாய்விரும்பி மஞ்ஞைப் பறையூர்தி-தேய்மதிகொண்(டு)
அம்பலத்தி லாடுவா னுமிவர்நந் தெய்வமெனில்
எப்பயனு மென்னு மியம்பு

(பறை — பறவை)

## ஆறுமுக சுவாமி நிந்தாஸ்துதி

மாம னிலேயான் மகிழ்தந்தை யோர்கறையான்
ஏமமுறு மண்ணன் இகலெலியான்—வாமமிலா
மாது குறக்குடியாள் மாதா மலைக்கொடியாள்
ஏதுபுகழ் ஆறுமுகற் கே.

வினவுத்தர வெண்பா.

நாட்டுசிவ னுற்றநிழல் நண்ணுதிரு மால்படைநூல்
காட்டும்யா கத்தூண் கடப்பாடு—வீட்டுமுயர்
மானந் தருமப்பு மன்னுதன்மைப் பன்மைப்பேர்
ஆனந்த விகடனே யாம்.

(ஆல், நந்து, அவி கடன், ஏ, யாம்.)

## இறந்தும் இறவாதவர்கள்

குறள் வெண்பா.

நாவாரப் பேசும் படத்தில் நடித்தவரே
சாவா உடம்பெய்தி னர்.

விநோதச் சிலேடை வெண்பா.

## பஸ்வண்டிக்கும் பாம்புக்கும்

இரையும் மனிதரைக்கண் டோடு மிடறித்
தரையிற் புரளின் றருமே—புரையில்துயர்
செப்பும் பணமெடுக்குந் தேர்மால் சுமந்திடுமே
ஒப்பில்பஸ் பாம்பெனவே ஓர்.

பணம் – காசு, பாம்பினிடம்
மால் – விஷ்ணு, பெருமை.

ஈழகேசரி 4-10-36.

# குடிகாரன் கூறியது

## ஈக்களின் சிறப்பும்! மனிதப்பிறவியின் இழிவும்!!

[சங்கரப்பிள்ளை என்பவர் தாம் வழக்கமாகக் குடிக்கும் பசுபதி வீட்டிற்குச் சென்று கள் தரும்படி கடனுகக் கேட்டார். பழைய கடனும் இருந்தமையால் பசுபதி கொடுக்க மறுத்தபொழுது பலமுறையும் கெஞ்சிக் கெஞ்சிக் கேட்டார். வாய்க்கவில்லை. ஈற்றிலே "பசுபதி, நீ கள்ளுத்தராவிட்டாலும் கள்ளையாயினும் ஒருமுறை காட்டு. தின்றுசை தீராவிட்டாலும் கண்டாசைதீரட்டும்." என்று வேண்டினர். உடனே மனமிரங்கிய பசுபதி கள்ளோடுகூடிய பாத்திரத்தை அவர் முன்பு வைத்தலும் ஆயிரக்கணக்கான ஈக்கள் (இலையான்கள்) விழுந்து குடித்து முழுகிக் கிடப்பதைக் கண்ட சங்கரப்பிள்ளை சொல்லிய பாட்டு.]

ஈழகேசரி 7-5-31.

கட்டளைக் கலித்துறை

*தாயார் இருந்தென்ன! மக்கள் மனைவியர் சார்ந்துமென்ன!*
*மாயா உயிர்பெறு மானுட யாக்கையில் வாழ்ந்துமென்ன!*
*ஓயாது தாங்குடித் தேசுப வாழ்வுறும் உத்தமஇவ்*
*ஈயாய்ப் பிறந்தில னேகள்ளில் மூழ்கி இறப்பதற்கே !!*

## போற்றுதும் ஈழகேசரியை!

கட்டளைக் கலித்துறை

*சாதிப் புலியும் சமயக் கரடியும் தாழ்வுயர்வாம்*
*பேதக் கரியும் அடிமைக் குரங்கும் பெரும்வகுப்பு*
*வாதமுட் பன்றியும் தம்வலிமாய்ந்து வழிப்படநற்*
*போதக் கருச்சனை செய்ஈழ கேசரி போற்றுதுமே.*

# ஈழகேசரிப் பிள்ளைத் தமிழ்

[பருவத்துக்கு ஒன்றாகப் பத்துப் பருவத்திற்கும் பத்துப் பாடல்கள் உள்ளன. ஈழகேசரி 12-7-34.]

## 1. காப்புப் பருவம்

விருத்தம்

மண்ணுலகு கலியுகத் தாதையென வாழ்த்தவும்
    மாசிலாப் புலமை மிக்கோர்
வடிதமிழ்ப் பாமாலை யதுகொண்டு வையவும்
    வற்றாத கருணை உதவும்
விண்ணுலக ஈசனைத் தமிழ்வல்ல கீரனார்
    வேண்டுமாற் றுப்ப டைக்கு
வீரமுய ரும்படையை யீந்தவன் முதலினோர்
    வெந்துயர் தவிர்த்த முதலை
எண்ணுதலில் மாவரம் பெற்றசூர் மாமரம்
    செற்றருளு மெந்தை குகனை
ஈராறு நயனனை இ ழுந்நான்கு பக்கமுடன்
    இயலீழ கேசரி யெனும்
பண்ணுலவு தமிழோங்கு சுன்னையம் பதியிலுதி
    பாலகற் காக்க வென்றே
பணிந்தேத்து வாமிருவர் புடைசூழ மயிலேறு
    பண்ணவனை நெஞ்ச மதிலே.

## 2. செங்கீரைப் பருவம்

இப்பெரிய ஈழத்தி லெமதுதமிழ் மக்கள்தம(து)
    இடுக்கண் களைந்த ரசியல்
எனுங்கடலு மும்மொழியெ னுஞ்சலதி யும்பருகி
    ஏப்பமிடி ராம நாத

திப்பிய மகானுபவ வள்ளலுக் கீந்திட்ட
செம்பெயர் புனைந்த சிறுவ
தேனுலவு தமிழ்வாணர் கரமெனுந் தொட்டிலிற்
சேர்ந்துவிளை யாடு பால
ஒப்பரிய கடலாடை உறுமயிலை மன்னிவாழ்
வுளுற்றுமோர் ஐய னீன்ற
ஒண்குழவி யேநான்கு ரூபாவெ னுஞ்செவிலி
ஓம்பவளர் தனய என்றும்
செப்பரிய சுவையோங்கு மிகுபுகழ்க் கட்டுரைச்
செங்கீரை ஆடி அருளே
செந்தமிழ்ப் பால்மணம் மாருத செல்வநீ
செங்கீரை யாடி யருளே.

## 3. தாலப் பருவம்

தொண்டு விளங்கும் பக்கமெலா முயர்
சொற்கள் விளங்கும் வரிக ளெலாம்
தொன்மை விளங்குங் கொள்கை யெலாம்
தூய்மை விளங்கும் எண்ண மெலாம்
கண்டு விளங்கும் விஷய மெலாம்
கரும்பு விளங்கும் செய்யு ளெலாம்
கற்பு விளங்குக் கதைக ளெலாம்
காட்சி விளங்குங் கருத் தெல்லாம்
பண்டு விளங்கும் சரிதையெ லாமொரு
பாலில் விளங்கும் புதின மெலாம்
பச்சை விளங்கும் பாங்க ரெலாம்
பக்தி விளங்கும் தோத்திரமெலாம்
கொண்டு விளங்குங் கேசரியாங்
குழவீ தாலோ தாலேலோ
கோதறு சுன்னைப் பதிமேவுங்
குழவீ தாலோ தாலேலோ.

## 4. சப்பாணிப் பருவம்

சீர்மருவு தென்மலையி மன்னிவாழ் பொன்னைய
தேசிகன் தந்த செல்வா
தெய்வநெறி கடைப்பிடித் துய்வுநெறி காட்டுமுயர்
செம்பொரு ணிறைந்த செல்வா
நேர்மருவு தமிழ்மக்கள் வீடுதொறு மேகியவர்,
நெஞ்சினில் விளங்கு செல்வா
நிகழுறப் போர்புரிய முகமனது நோக்காது
நிலைகலங் காத செல்வா
பேர்மருவு பஞ்சாக்க ரப்பெயர் புனைந்தெமது
பேதைமையை நீக்கு செல்வா
பேசுமணி பருதியிற் பொலியவே தாமரைகள்
பெறுமுகை விரிந்த வதனால்
தார்பெருகு சுன்னைவரு கேசரிச் செல்வநீ
சப்பாணி கொட்டி யருளே
சண்முகக் கடவுளுறு * கரமெனப் பொலிகரந்
தம்மைநீ கொட்டி யருளே.

[ பஞ்சாக்கரம் ஈழகேசரி — 5 எழுத்து ]
* 12 பக்கம் 12 கரமாயிற்று.

## 5. முத்தப் பருவம்

சொல்லும் பரத கண்டத்துத்
தோலா நாவின் தொண்டர்கடாம்
சொற்ற மொழியாம் மணித்திரளுந்
தோன்றுந் தலைமைப் பேருரையும்
வெல்லும் மேலை நாட்டுயரும்
விஞ்ஞா னக்கலை விரிவுகளும்
வேண்டுமி லங்கா வரசியலும்
விளங்கு சிரிப்பின் விகடங்களும்

கல்லுங் கரையுந் துயருடையும்
ஹரிசனர் மகிழுங் கட்டுரையும்
கற்பக மென்னக் கருதியவை
காட்டும் படிதாய்க் காசினியிற்
புல்லுந் தேவர் திருக்குறளும்
பொலிவாய் மூத்தந் தருகவே
பொன்மலை தோன்றிய கேசரியே
பொலிவாய் முந்தந் தருகவே.

## 6. வருகைப் பருவம்

பொன்னுலகு சென்றபொன் ராமநா தன்றனது
புகழொளி விளங்கு குழவீ
பூவுலகு தமிழ்போற்று நிலனெலாம் போயடிமை
போக்குரை முழங்கு குழவீ
மன்னுபல வனவிலங் கின்னுயிரை யுண்டுண்டு
வாட்டுகே சரிபோ லாது
வாழ்கின்ற மக்களுறு மடிமையாம் விலங்கினை
மடித்தருள் வழங்கு குழவீ
மின்னுலவு வேற்றுதை கண்ணென விளங்கியவர்
வேண்டுமயி லொத்த குழவீ
வேதனைசெய் வாதங்கள் போக்கவே நடுநின்று
வென்நிடா தோங்கு குழவீ
கொன்னுலவு மிருள்கடிந் தின்னொளிசெய் ஞாயிறிற்
குழவீநீ வருக வருக
கொண்டல்பொழி சுன்னையம் பதியங் குதித்தநீ
குலவுஞா யிறில் வருகவே.

* அக்காலத்திலே பச்சைத்தாள் முற்பக்கம் உள்ளது.

## 7. அம்புலிப் பருவம்

அலையோங்கு பாற்கடன் மீதுதிரு மகளினுட
னவதரித் துலவு வாய்நீ
அன்னவள் வயிற்றிற் பிறந்தெங்கு முலவுவா
ஞயினுன் கேசரி யிவன்
கலையோங்கி நின்றுபின் தேய்குவாய் நீஇவன்
கலைவளர்த் தோங்கி வருவான்
காசினியில் இரவில்நீ விளங்குவாய் இவனெனிற்
காய்பகலி னும்வி ளங்கும்
நிலைநீங்கு மிருபக்க முடையவன் நீஇவன்
நிகழ்பன்னி ரண்டு பக்கன்
நீபுவி யெனும்பெயர் பெற்றுளாய் இவனிங்கு
நீண்டகே சரிப்பேர் பெற்றுன்
அலையோங்கு மனவிருளு நீக்குவா ஞதலால்
அம்புலீ ஆட வாவே
அழகுதிகழ் மணிதங்கு சுன்னைவாழ் கேசரியொ
டம்புலீ ஆட வாவே.

( அன்னவள் வயிறு —திருமகள் அச்சகம். )

## 8. சிற்றிற் பருவம்

சுந்தர மாருஞ் சுன்னையிலே
தோன்றிய நின்னைத் தூய்மையுறச்
சொல்லிய விதியின் வழுவாது
சோதியி லாமைச் சாந்தூட்டி
எந்திர நதியில் நீராட்டி
இலங்கும் விலாசக் கலன்பூட்டி
இரண்டு சதத்துப் பொட்டிட்டே
எண்ணுங் கந்தோர் தனில்விட்டே

மந்திர நிறைந்த வீதியிலே
வருமா றனுப்பு மவர்களையெம்
வாயால் தூற்றும் வகையன்றி
மைந்தா நின்னைத் தூற்றலிலோம்
சிந்தை மகிழ்ந்தே மணியாற்செய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேடரு சமரச கேசரியே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

(அக்காலம் 2 சத முத்திரை போதியது)

## 9. சிறுபறைப் பருவம்

துப்புமிகு சாகரந் தோன்றுமுய ரீழமுறு
தொல்லியாழ்ப் பாண நகரில்
துலக்குநற் சுன்னாக மேவரச கேசரீ
சோர்விலா தென்றும் நின்று
கைப்புமிகு மடிமையாம் புலிகளும் வறுமையாம்
கழுதையும் பகைமை யென்னும்
கரிகளும் தீண்டாமை யென்கின்ற கரடியும்
காரார் வகுப்பு வாதத்
தப்பெனும் நரிகளும் பிடித்தது விடாமையாம்
தாழ்வார் குரங்கு குலமும்
சஞ்சல மெனும்முயலு மச்சமாம் மான்களும்
தாவிநிலை கெட்டோ டவே
செப்பலுறு பழமையிற் பேரிடிக் கர்ச்சனைச்
சிறுபறை முழக்கி யருளே
செந்தமிழ்த் தாயரசு வீற்றருள வென்றுநீ
சிறுபறை முழக்கி யருளே.

## 10 சிறுதேர்ப் பருவம்

தொண்டுநிகழ் பொன்மலையி லேயுதித் துயர்பழமை
தோன்றிட விளங்கு மிதனால்
தொன்னாளி விமயமலை பெற்றுவளர் பசுமையது
துன்னுமுமை யம்மை யொப்பாய்
கண்டுநிகர் கட்டுரைகள் கொண்டறிவு
[பொழிதலாற்
கருமுகிலை யேக டுப்பாய்
காசினியி லேபெருஞ் செய்தியைக் காட்டலாற்
கண்ணாடி தனை நிகர்ப்பாய்
கொண்டநெறி நாடோறு மோங்கலாற் கறையிலாக்
குலவுபிறை தன்னை அன்னாய்
தெண்டமுறு கடுமொழிகள் நீக்கியே கேசரீ
சிறுதேர் உருட்டி யருளே
தெய்வமண மோடுதமிழ் மணத்தூசி பொங்கிடச்
சிறுதேர் உருட்டி யருளே.

# தீபாவளிக் கடைவீதிக் காட்சி

**விருத்தம்**

"எங்களா லன்றோ இந்த இருநில மாந்த ரெல்லாம்
தங்களின் மானம் யாவுந் தகையுடன் மறைக்கின்
[ றோ"ரென்(று)
அங்கவர் செருக்குப் பூண்டே அனுப்பிய ஆடை எல்லாம்
துங்கமார் கடைகள் தோறும் தூயவாய் விளங்கிற்றுமால்

பற்பல, நாடு,தோறும் பாங்குடன் பிறந்த ஆடை
அற்புத வீதி ஒன்றி லடைந்தவண் இலங்கல் நோக்கின்
கற்பனை கடந்த அந்தக் கவினுயர் தேசமெல்லாம்
பொற்புட னெருங்கு கூடிப் பொலிவது போலுமன்றே

மீனினை மானுங் கண்ணார் விளங்கிடு "மோட்டா" ரேறி
வானர மகளி ரென்ன வந்தவ ணிறங்கி நெஞ்சம்
போனஅவ் ஆடைஎல்லாம் பொள்ளென வாங்கி—நாதர்
ஆனவர் வரவு நோக்க இல்லக மடைந்தா ரன்றே

காரினுள் மறைந்து தோன்றுங் கவின்மதி முகத்தார்
[" மோட்டக்
காரி" னுள் மறைந்து தங்கள் கடிமுக மதனைக் காட்டிச்
சீரிய ஆடை வாங்கச் சென்றிலே மெனவ ருந்திக்
கூரிய கணவ ரோடுங் கொடும்பகை கொண்டாரன்றே.

காவல்சே ருடம்பைக் குத்துங் கருத்தினை நெஞ்சில்
[ வைத்துப்
பூவென மென்மை யுற்ற புடைவைகள் பெற்றார் பல்லோர்
மேவிடு வருத்தம் நோக்கார் மெய்வுறு தொண்ட ரென்னு
மாவலாற் கதரே வாங்கி அடைந்தனர் சிலரே அம்மா.

தூண்டிடு முவகை தோற்றித் துயருறு மின்சொற் செப்பி
மாண்டபற் பலவா மாடை வருபவர்க் களித்த லாலே
வேண்டுவார் வேண்டு மஃதை விருப்புட னீயு மெங்கள்
ஆண்டவன் செயலை யொத்தா ரளப்பில்வர்த் தகரே
[ அம்மா.

செல்வமோ டிளமை ஆண்மை சீரிய பிறவு மெல்லாம்
ஒல்லையின் மாறி மாறி ஒருவரின் நீங்கு மென்னும்
நல்லியல் பிணைவி ளக்கி நாட்டுது மெனுக்க ருத்தால்
பல்பல தைய லெங்ரம் பாங்குடன் சுழன்ற மாதோ.



## துயரடையும் பாட்டாளிக்குப்

# பூமித்தாய் சொல்லியது

"ஆறுமுக வடிவேலவனே" என்ற காவடிச்சிந்து மெட்டு.

வேலை நிறைந்துமுன் கூலி குறைந்திட
வேஷத்தில் நீசிறியோன்—உன்றன்
மேலை மினுக்கிட வேண்டிய காசொடு
வேளையும் இல்லையன்றோ! 1.

பட்டுடை யும்நல்ல சட்டையும் கொள்சிலர்
பல்தொழில் பார்த்திடினும்—சிறு
கட்டை உடையணி உன்வர்க்கம் என்னுடைக்
கண்மணி யாவாரே 2.

தூசியும் வேர்வையும் தோயு முடலென்று
துன்பத்துள் மூழ்காதே—இவை
பூசிய வாசப் பொருளென்று நான்தினம்
போற்றுகின் றேனுனையே 3.

மாலை கடற்கரை யின்மனை யாளொடு
வந்திடு வோர்களிலும்—நல்ல
காலை எருவைச்சு மந்தபெண் ணேடு
கமம்வரு வோர்சிறந்தோர் 4.

ஆரும் சமைத்தன்பி லாமற் கொடுத்திட
அஞ்சிஉண் போர்களிலும்—பசி
தீரும் படிமனை யாள்சமைத் தன்புரை
செப்பஉண் போர்சிறந்தோர் 5.

உள்ளக் கசிவின்றி "ஆயா"பா லூட்டியே
ஒம்புங் குழந்தையிலும்—நெஞ்சை
அள்ளிய தாய்முலைப் பாலுண்பாட் டாளியின்
அன்புக் குழந்தைநன்றே 6.

ஓட்டு முடலுமொ ளியில் வதனமும்
உள்ளவன் நீயேனும்—வீடு
கட்டி உலகைஇ ரட்சிக்கும் வன்மையுன்
கையினில் உள்ளதன்றே. 7.

சேரும் அழுக்குத் துணிவெளுப் பேனென்று
சிந்தையில் மாளாதே—உலகில்
யாரும் அழகு பெறுவது முன்னுடை
அன்புத் தொழிலாலே 8.

தாங்கும்பாட் டாளிக்குத் தக்க கவுரவம்
தந்திட வில்லையெனில்—உலகில்
ஓங்கும் பிணக்குகள் நீங்குவ தேயில்லை
உண்மை இதுமைந்தனே 9.

தன்னைப் புரிந்திடும் பாட்டாளி வர்க்கத்தைச்
சற்றும் மதியாதான்—இன்று
என்னை உணர்ந்தவ னல்ல இறுதியில்
ஏற்றபா டம்படிப்பான். 10.

எந்திரம் பற்பல வந்ததில் பாட்டாளி
ஏற்றசு கப்பெறவே—நல்ல
தந்திரம் கண்டுவ குத்திடு திட்டங்கள்
சாருமினித் துயரேன் 11.

———

# ஓட்டப் பாட்டு

[1949-ம் ஆ மாசிமீ 4-ந் தேதி நடைபெற்ற
மரதன் அஞ்சல் ஓட்டம்பற்றிய பாடல்களுட் சில.]

### இலங்கையின் சிறப்பு

உருவிற் சிறிதாம் நாடெனினு முள்ளங் கவரும்
[பலவளத்தால்
திருவிற் பெரிய நமதீழஞ் செப்பும் சரிதப் புலவர்களால்
மருவிப் புகழும் வரலாற்றின் மாண்பு நிறைந்து மகிபாலர்
கருவிற் படியும் வனப்பினதாய்க் காலம் பலவுங்
[கழித்ததுவே.

### ஸ்ரீ லங்கா மங்கைமேற் காதல்

இந்துச முத்திரத்தி லின்பஞ்செய் பொருள்கள் தாங்குஞ்
சுந்தர லங்கா வென்னுந் தோகையை மணக்குக் காதல்
வந்திடு மேலை நாட்டு வாணிகக் கப்பல் மைந்தர்
சிந்தையிற் பொங்க அன்னார் செய்சூழ்ச்சி சிறிதன் றுமே

### ஆங்கிலேயரின் ஆட்சி அமைதல்

என்றூழ் மறையா நிலவலயத் தேவுந் திகிரி ஆங்கிலர்கள்
ஒன்றுய்ப் பலவாய்க் கரைநகரை ஓங்கும் போரில் வசமாக்கிப்
பொன்றும் பதினெண் ணூருண்டு புகுந்த பதினேந்
[தாமாண்டு
துன்னு மிலங்கை முழுவதையும் தொடுத்தா ராட்சி
[அடுத்தாரே.

### ஆங்கிலேயர் ஆட்சியின் பேறு.

மலைவளந் திரட்டி மேலாம் வைரமும் பிறவுங் கூட்டி
உலைவறு பொருளை யீட்டி உவப்புட னாட்சி நீட்டிக்
கலைசில எமக்கிங் கூட்டிக் கருத்தினி லடிமை காட்டித்
தலைவர்கள் விழிக்கும் வண்ணந் தனியர சியற்றி னுரே.

### தலைவர்களின் சுதந்திர தாகம்

முன்னர் வாழருணசலம் பீரிசு
முந்து ராமநா தன்முத லோர்களும்
பின்னர் வாழ்ந்த ஜெயத்திலக் காவுஞ்சீர்
பேணுந் தொண்டுடைப் பேரபி மானரு
மன்னி யோர்களி னுட்சி ஒழிந்தெம
தாழி யிலங்கை சுதந்திர மண்டிட
மன்னுந் தாக விதைபுதைத் தேகினுர்
மங்கி யம்முளை தங்கி வளர்ந்தது.

### ஓட்டங்கண்ட போதுஜனங்கள் வழிகளில் மகிழ்தல்

வழியினிற் கண்டோ ரெல்லாம் வாயிடை விரலை வைத்து
விழியினிற் புதுமை தேக்கி விரும்பிடு சுதந்தி ரத்தா
லொழிவிலா வுவகை யாலே யுளத்திடை வீரம் பொங்க
அழிவகல் லோட்ட மோடு மாசையால் முடுகி னுரே.

### குரங்குகளின் குதூகல நிலைமை.

ஓட்டங் கண்ட குரங்கெல்லா மொளிசே ரீழச் சுயவரசில்
நாட்டங் கொண்டு மகிழ்வெய்தி நண்ணும் மரத
[ னேட்டமெனக்
காட்டும் படிக்கு மரந்தோறும் களித்துப் பாய்ந்து
[ பாய்ந்தின்ப
மீட்டுந் தன்மை யிதுவாகு லேயும் மாந்த ரியல்பென்னும்.

### ஆனைகள் ஆசிமொழி கூறல்

இதஞ்செ யிலங்கா சுதந்திரத்தை யெங்கும் பரப்பு
[மோட்டமிதை
மதஞ்செய் கொடிய ஆனைகளும் வழியே கண்டு விலகித்தாம்
அதஞ்செய் தன்மை மறந்துகையை யாங்கே யுயர்த்தி
[ஆசிமொழி
சதஞ்செய் பாங்கி லுரைப்பனபோல் தலைக ளசைத்துப்
[பிளிறினவே.

### மாதன் ஓட்டங்கண்ட மலைத்தொடர்களின் இறுமாப்பு.

சிங்களர் தமிழ ரோடு சேர்முசி லீங்கள் "பேக்கர்"
எங்களைப் போலி ணைந்தே என்றுமொற் றுமையை நாட்டிப்
பங்கமி லீழத் தாய்க்குப் பயன்பல விளைப்ப ரோவென்(று)
இங்குள மலைகள் கூறி யிறுமாந்து நின்ற மாதோ.

### ஓடிய வாலிபரை நோக்கி ஆறுகள் உரைத்தவை.

விளங்குபொரு ளாதாரச் சுதந்தி ரந்தான்
மெய்யான விடுதலையா மென்று காட்ட
உளங்கவரும் நெல்லாதி விளைக்கும் வண்ணம்
ஓடுகிறோ மீழத்தா யுடல்பூ ரிக்க
இளங்காளை வாலிபர்கா ளுங்க ளோட்ட
மின்றோடு முடியாம லெம்மைப் போலக்
களங்கமிலாத் தாய்ப்பணியாய் நிலவு மாறு
கருதியின்று பிரதிக்ஞை கழறு வீரே.

### பட்சிகளும் விழாப் பார்க்கப் பறந்தமை.

அறந்தெரி சிங்க ளத்தோ டணிதமிழ் மொழியே யென்னுஞ்
சிறந்திடு சிறகி ரண்டால் சீரிய ஈழந் தன்னை
வறந்திடா வண்ணம் மேலாய் வளர்க்கலா மென்ற டித்துப்
பறந்திடு பட்சி சாலம் பாய்ந்தன கொழும்பு பார்த்தே.

### பிரதமர் திரு. D. S. சேனநாயக்கா அவர்கள் விழாநிலையத்துக்கு வருகை.

உள்ளம்போற் றூய வெள்ளை யுடைதரித் துயர்ந்த ஞானந்
தெள்ளிய புத்தர் கோயிற் றெரிசனம் முடித்து மீண்டு
கள்ளமில் பதவிக் கேற்ற கணிப்புடை யணிந்து மன்றிற்
பொள்ளெனப் புகவீ ழத்தாய் பொன்னுடல் பூரித் தாளே.

மந்திரி மார்கள் கல்வி வல்லவர் மகிமை யாளர்
தந்திர ஆட்சி மன்றச் சார்புடைப் பெரியோர் மற்றோர்
வந்துறை அவையி னுப்பண் உடுநடு மதியே போல
இந்திர னிவனே யென்ன இருந்தனன் றவிசின் மீதே.

### பிரதமரிடம் சுதந்திர ஓலையை அளித்தலும் கரகோஷம் பாவுதலும்

அளித்திடும் போதி லாங்கே அமர்ந்திடு மக்கள் வாரி
களிப்பினுற் கரம்பு டைத்துக் காட்டிய வோசை யைந்தாய்
வழிப்படு கண்டம் வாழும் மாந்தரை யதிரச் செய்து
விழிப்புடைத் தேவர் கட்கும் விழவினைத் தெரித்த தன்றே.

### பிரதமருக்குப் புகழ்மாலை

மடிமையா ரிலங்கா மாது மகிழ்கொள்ளும் வண்ண மன்ன
னடிமையாந் தளைய றுத்தே யகிலமும் மதிக்கு மாறு
விடுதலை யளித்த மைந்தன் வித்தகன் சேனநா யக்கா
"முடியிலா மன்ன" னென்று முழங்கின ராங்குள் ளாரே.

### விழா நிறைவெய்தல்.

"மண்ணுய ரிலங்கை மாது வளர்வுறு சரித மெல்லா
மெண்ணியிங் கெழுது வோர்க ளியலுமிவ் வஞ்ச லோட்டம்
நண்ணும்பொன் னெழுத்தி லிட்டு நாட்டுவ" ரென்று
[வந்தோர்
திண்ணிய மொழியிற் பேசிச் சென்றனர் விழவொ ழிந்தே



